# திருக்குர்ஆனை அணுகும் முறை

*திருக்குர்ஆன் ஆய்வு பற்றிய இந்த விளக்கவுரையை இரு நோக்கங்களை முன்வைத்து எழுதியுள்ளேன்.*

*முதலாவதாக : ஒரு சாதாரண வாசகர் திருக்குர்ஆனின் கருத்துகளை ஆய்ந்து பார்ப்பதற்கு முன்னர், அதன் பொருளை எளிமையான முறையில் விளங்கிக்கொள்ள உதவும் சில விஷயங்களை நன்கு அறிந்துகொள்ள வேண்டும்; அப்படியில்லையென்றால் திருமறையை ஆய்ந்து பார்க்கும் வேளையில் இவை திரும்பத் திரும்ப வாசகரின் மனதில் குறுக்கிடும்; இவற்றை அறிந்துகொள்ளவில்லையென்றால் மனிதன் குர்ஆனுடைய அர்த்தத்தின் விளிம்பிலேயே சுற்றிக்கொண்டிருப்பானே தவிர, அதன் ஆழத்தில் இறங்கும் வாய்ப்பே அவனுக்குக் கிடைக்காது.*

*இரண்டாவதாக : திருக்குர்ஆனை அறிந்து கொள்ள முயலும் நேரத்தில் மக்களின் சிந்தையில் பொதுவாகத் தோன்றும் பல கேள்விகளுக்குரிய பதில்களை முன்கூட்டியே தந்துவிட வேண்டும்.*

### *முற்றிலும் தனிப்பாணி*

*நாம் வழக்கமாகப் படிக்கும் நூல்களில், பொதுவாகவே குறிப்பிட்ட ஒரு பொருளைப் பற்றிய விளக்கங்களும், கருத்துகளும், ஆதாரங்களும் ஒரு தனித்தன்மை வாய்ந்த, நூலாக்க வடிவில் தொகுக்கப்பட்டு ஒரே சீரான முறையில் அமைக்கப்படுகின்றன. திருக்குர்ஆனைப் பற்றி முன்னரே தெரிந்திராத ஒருவர்,*

அதை முதன் முதலாகப் படித்து அறிந்து கொள்ள முற்படும் போது ஒரு நூல் எனும் முறையில் அதில் சாதாரண இதர புத்தகங்களில் இருப்பது போல், கருத்துரைகள் பற்றிய முன்குறிப்பு தரப்பட்டி ருக்கும்; பின்னர் அசல் விவாதப் பொருளை அத்தியாயங்களாக வும், துணைத் தலைப்புகளாகவும் பிரித்துத் தொடர்ச்சியாக ஒவ்வொரு பிரச்னை பற்றியும் விவாதிக்கப்பட்டிருக்கும் என்றும், இவ்வாறே வாழ்வின் பல்வேறு துறைகளையும் தனித்தனியாகப் பிரித்து அதற்குரிய கட்டளைகள், விதிகள், அறிவுரைகள் ஆகியவை தொடர்ச்சியாக விளக்கப்பட்டிருக்கும் என்றும் இயல்பாகவே எண்ணுவார். ஆனால் இந்த வேதத்தை எடுத்து ஆராயத் துவங்கும் போது, அவர் நினைத்ததற்கு முற்றிலும் மாறாக, அவர் இதற்கு முன் சிறிதும் அறிந்திராத ஒரு புதிய பாணியில் விஷயங்கள் அமைந்திருப்பதைக் காண்கிறார்.

சமயக்கோட்பாடுகளும், ஒழுக்க நெறிகளும், ஷரீஅத்தின் சட்டதிட்டங்களும் இதில் இடம் பெற்றிருக்கின்றன. சத்திய அழைப்பும், நீதி போதனைகளும், படிப்பினை புகட்டும் அறிவுரைகளும் இதில் காணப்படுகின்றன. பல விஷயங்கள் பற்றிய விமர்சனங்களும், தவறான போக்குகளைக் கண்டிக்கும் வாசகங்களும், அச்சமூட்டி எச்சரிக்கும் செய்திகளும், நற்செய்தி கூறும் விஷயங்களும், மன அமைதிக்கான மாண்புறு அறிவுரை களும் இதில் எடுத்துரைக்கப்படுகின்றன. மேலும், விவாதிக்கப் படும் விஷயங்கள் பற்றிய ஆதாரங்களும் சான்றுகளும் இதில் தரப்பட்டுள்ளன. வரலாற்று நிகழ்ச்சிகளும், அண்டங்களின் அமைப்பு பற்றிய குறிப்புகளும் இதில் காணப்படுகின்றன. ஆனால், இவை யாவும் தனித் தனியாக இல்லாமல் குர்ஆனுக்கே உரிய பாணியில் ஒன்றன் பின் ஒன்றாக வருவதை அவர் காண் கிறார். சில சமயம் ஒரே பொருள் பலவிதங்களில் பல்வேறு வித மான சொற்பிரயோகங்களுடன் திரும்பத் திரும்பக் கூறப்படுவ துண்டு. ஒரு கருத்துரைக்குப் பின்னர் மற்றொன்று திடுமென்று தொடங்கிவிடுவதுமுண்டு. சில சமயம் ஒரு விஷயத்தைப் பற்றிய விவரத்தின் இடையே பிறிதொரு விஷயக் குறிப்பு திடீரென்று

வருதலுமுண்டு. சொல்பவர், சொல்லப்படுவோர், சொல்லப் படும் திசை ஆகியன மாறிமாறிச் செல்வதுமுண்டு.

திருக்குர்ஆனில் வரலாற்று நிகழ்ச்சிகள் காணப்படுகின்றன. ஆனால் அவை வரலாற்று நூல்களில் காணும் பாணியிலல்ல. இதில் மெய்யறிவு, தத்துவம் பற்றிய சர்ச்சைகள் இருக்கின்றன; தத்துவ நூல்களில் காணப்படும் போக்கிலல்ல. இதில் மனித னைப் பற்றியும், பிரபஞ்சத்தைப் பற்றியும் விவரங்கள் எடுத்து ரைக்கப்பட்டுள்ளன; ஆனால் இயற்கை விஞ்ஞான (Natural Science) நூல்களில் கூறப்படும் வகையில் அல்ல. சமூகவியல், அரசியல், பொருளியல், வாழ்வியல் ஆகியவற்றோடு தொடர் புள்ள பிரச்னைகள் இங்கு விவாதிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் இந்தத் துறையில் மேற்கொள்ளப்படும் விவாத முறைப்படியல்ல. இதில் சட்டப்பிரச்னைகள், அதற்குரிய விவாதங்கள், அடிப்படை கள் இடம்பெற்றிருக்கின்றன. ஆனால் அவையோ சட்ட நூல்க ளில் காணப்படும் பாணிக்கு முற்றிலும் மாறுபட்டிருக்கின்றன. இதில் ஒழுக்கத்தைப் பற்றிய அறிவுரைகள் அருளப்பட்டிருக் கின்றன; ஆனால் ஒழுக்கவியல் நூல்கள் அனைத்திலிருந்தும் மாறு பட்ட பாணியில் அவை கூறப்பட்டிருக்கின்றன. எனவே நூல மைப்பு பற்றி தாம் கொண்டுள்ள கருத்துகளுக்கெல்லாம் முற்றி லும் வேறுபட்ட அமைப்பில் குர்ஆன் அமைந்திருப்பதைப் பார்க்கும் அவர் குழம்பிவிடுகிறார். இது சிறிய, பெரிய பல்வேறு தனித்தனிப் பொருள்களைப் பற்றிய வாக்கியமாகும் என்றும், இது தொடர்போ, முறையான அமைப்போ, ஒன்றுக்கொன்று இணைப்போ இல்லாத, அங்குமிங்குமாய்ச் சிதறிக் கிடக்கும் ஓர் உரையாகும் என்றும், இவ்வாறு இணைப்பற்ற வாக்கியங்களை தொடர்ச்சியாக எழுதி, ஒரு நூல் வடிவில் அமைக்கப்பட்டுள்ளது என்றும் அவர் கருதுகின்றார். குரோத மனப்பான்மையுடன் இதைப் பார்ப்பவரோ,தன்னுடைய ஆட்சேபணையைக் கிளப்பு வதற்கும், குறைகள் காணுவதற்கும் இதனை ஆதாரமாகக் கொள்ள முற்படுகிறார். நல்லெண்ணத்தோடு நோக்குபவரோ,

மேற்சொன்ன அமைப்பில் ஏற்படும் ஐயப்பாடுகளிலிருந்து தம்மைக் காத்துக் கொள்ளச் சிலசமயம் பொருளைப் பற்றிக் கவனியாமல் இருந்துவிடுகிறார். சிலசமயம் வெளிப்படையாகத் தென்படும் ஓர் ஒழுங்கற்ற அமைப்புக்குப் பல பொருள்களைக் கற்பித்து மனதை ஆறுதல் படுத்திக்கொள்ள முயல்கிறார். இன்னும் சிலசமயமோ வாக்கியங்களிடையே செயற்கையான தொடர்புகளை உண்டுபண்ணி வினோதமான முடிவுகளை எடுக்கிறார். சிலசமயம், ''பலதரப்பட்ட விஷயங்களைத் தொடர்பில்லாமல் கூறும் வாக்கியம் இது'' எனும் சித்தாந்தத்தை ஏற்றுக் கொள்கிறார். இதன் காரணமாக ஒவ்வொரு வசனத்தையும் அதற்குரிய சூழ்நிலையிலிருந்து பிரித்து அதற்குள் வினோதமான பொருள்களைப் புகுத்திவிடுகிறார். அப்பொருள்களோ, இவ்வாக்கியங்களைக் கொண்டு இறைவன் விளக்க நாடிய கருத்துகளிலிருந்து முற்றிலும் வேறுபட்டு நிற்கின்றன!

## படிக்கத் துவங்குமுன்...

ஒரு நூலை நல்ல முறையில் விளங்கிக் கொள்ள வேண்டுமென்றால், அதனைப் படிப்போருக்கு அதன் விவாதப் பொருளைப் பற்றித் தெரிந்திருப்பது இன்றியமையாத் தேவையாகும். அதன் இலட்சியம், மையக்கருத்து, நோக்கம் ஆகியவை பற்றி அவர்களுக்கு நன்கு தெரிந்திருக்க வேண்டும். அதனுடைய விளக்கும் முறை பற்றியும் அதனுடைய மொழிமரபு பற்றியும், விஷயங்களை அது எடுத்துரைக்கும் தோரணை பற்றியும் அறிந்திருக்க வேண்டியது அவசியமாகும். ஒரு குறிப்பிட்ட வாக்கியமோ, வாக்கியங்களோ தமது வெளிப்படையான கருத்தோடு என்ன பின்னணியைக் கொண்டுள்ளன, எத்தகைய நிலைகள் அல்லது எந்த நிகழ்ச்சிகளோடு அவை தொடர்பு கொண்டுள்ளன என்பதும் கருத்தில் இருக்க வேண்டும்.

சாதாரணமாக நாம் படிக்கும் நூல்களில் இவை வெகு எளிதில் தெரிந்து விடுகின்றன. எனவே அவற்றின் ஆழிய கருத்துகளைப்

புரிந்து கொள்வதில் எத்தகைய சிரமமும் இருப்பதில்லை. ஆனால் இவை நமக்கு அவ்வாறு எளிதில் குர்ஆனில் கிடைப்ப தில்லை. எனவே சாதாரண ஒரு நூலைப் படிக்கும் மனப் பாங்கோடு எவரேனும் குர்ஆனை ஓதி உணர முற்பட்டால் அதன் உள்ளக்கிடக்கை, மையக்கருத்து, நோக்கம் ஆகியவற்றுக்கான அறிகுறியைக்கூட அவரால் காணமுடிவதில்லை. அத்தகை யோருக்கு அதன் தோரணையும், விளக்கும் முறையும்கூடப் புதுமையாகவும், அந்நியமாகவும் தென்படும். பல இடங்களில் வாக்கியங்களின் பின்னணிகள் அவர் பார்வைக்கு வருவதே யில்லை. இவற்றின் காரணமாக சாதாரணமான ஒரு வாசகர் அங்குமிங்குமாக குர்ஆனில் சில நன்முத்துக்களை எடுத்துப் பயன்படுத்திக் கொண்டாலும் கூட இறைமறையின் அசல் ''ரூஹை''- அதன் உயிரோட்டத்தை அவர் உணர்வதில்லை. ஆக இந்த உயர் மறையின் ஞானத்தை எய்துவதற்குப் பதிலாக, அதன் பயன்களில் சிலவற்றை மட்டும் பெற்று மனநிறைவு அடை கிறார். பலர் குர்ஆனைப் படித்து விதவிதமான ஐயப்பாடுகளில் சிக்கி உழல்வதற்குக் காரணம், இந்த மறையை உணர்வதற்கான அடிப்படை அம்சங்களை அவர்கள் அறியாதிருப்பதேயாகும். இந்நிலையில் குர்ஆனைப் படிக்கும்போது அதனுடைய பக்கங் களில் பல்வேறு கருத்துகள் தொடர்பில்லாமல் சிதறிக் கிடப்பதாக அவருக்குத் தென்படுகிறது. பல வாக்கியங்களின் பொருள்கள் விவேகத்தின் பேரொளியில் ஜொலிப்பதை அவர் காண்கிறார். ஆனால், அக்கட்டத்தில், ஒரு தொடர்பும் இணைப்பும் இல்லா மல் அவை தனித்து நிற்கின்றனவே என்ற நினைப்பே அவர் உள்ளத்தில் கிளர்ந்தெழுகிறது. பல்வேறு கட்டங்களில் குர்ஆனின் விளக்கும் முறையையும். தோரணையையும் அறியா திருப்பதால், வாக்கியத்தின் அசல் கருத்திலிருந்தும் பொருளிலி ருந்தும் அவர் வெகுதூரம் விலகிச் சென்றுவிடுகிறார். எண்ணற்ற இடங்களில் வாக்கியத்தின் பின்னணி பற்றியும், அதற்குரிய சூழ்நிலை பற்றியும் அறியாதிருப்பதின் காரணமாக அவ்வாக்கி யத்தின் பொருள் குறித்து பலவிதத் தவறான எண்ணங்கள் கொள்ளும் நிலைக்கு ஆளாகி விடுகின்றார்.

## குர்ஆன் தரும் அடிப்படை விஷயங்கள்

திருக்குர்ஆன் எவ்வகையான நூல்? அது இறங்கிய விதமும் அதில் வகுக்கப்பட்டிருக்கும் ஒழுங்கு முறையும் யாவை? அதில் விவாதிக்கும் பிரச்னைகள் யாவை? அதன் வாதங்கள் அனைத்தும் எந்த நோக்கத்தைக் கொண்டு அமைந்துள்ளன? அதன் பலதரப் பட்ட பொருள் விளக்கங்கள் எந்த மையக்கருத்துடன் இணைக்கப் பட்டுள்ளன? தன்னுடைய நோக்கத்தை விளக்க எத்தகைய ஆதாரங்களை அது அளிக்கின்றது? எத்தகைய தோரணையைக் கடைப்பிடிக்கிறது? - இவற்றுக்கும் இவை போன்ற அடிப்படை யான கேள்விகளுக்கும் தெளிவாக, நேராகத் தொடக்கத்திலேயே ஒருவருக்கு விடை கிடைத்துவிட்டால் பல ஐயப்பாடுகள், தவறான எண்ணங்கள் ஆகிய அபாயங்களில் சிக்கிக் கொள்ளாமல் அவர் தப்பித்துக் கொள்வார்! குர்ஆனை அறிந்து கொள்வதற்கும், அதன் உள்ளக்கிடக்கையைப் புரிந்து கொள்வதற்குமான வழிகள் அவருக்கு எளிதாகிவிடும். சாதாரண நூல்களிலுள்ள அமைப்பு முறையைக் குர்ஆனில் தேட முற்பட்டு அதை அங்குக் காணாது, பக்கங்களைப் புரட்டி ஒருவர் மயங்கி நிற்பதற்குக் காரணம், அவர் குர்ஆனைப் படிப்பதற்கு வேண்டிய இந்த அடிப்படைகளை அறியாமலிருப்பதேயாகும். ''மதப் பிரச்னைகள் பற்றிய ஒரு நூல்'' எனும் கருத்துடன் அவர் இதைப் படிக்க முயல்கின்றார். 'மதப் பிரச்னை' பற்றியும் 'நூல்' பற்றியும் பொதுவாக நிலவும் கருத்துகளே அவர் சிந்தனையில் இடம் பெற்றுள்ளன. ஆனால் இங்கோ, தம் சிந்தையில் உள்ள உருவத்திலிருந்து முற்றிலும் வேறுபட்டதோர் அமைப்பே அவர்முன் தோன்றுகிறது; அது அவருக்கு மிகவும் புதுமையாகவும், அந்நியமாகவும் தென்படு கிறது. இதனால் விவாதிக்கப்பட்டிருக்கும் பொருள் அவர் சிந்தனையில் படியாமலே போய்விடுகின்றது. ஊருக்குப் புதியவ ரொருவர் எப்படி அதன் வீதிகளில் வழிதெரியாமல் தடுமாறு வாரோ அது போலவே குர்ஆனின் வாசகங்களுக்கிடையே இங்குமங்கும் அவர் அலைமோதுகின்றார்.

ஆனால், ''நீங்கள் படிக்கப்போகும் இந்த நூல் உலகிலுள்ள நூல்களிலிருந்து முற்றிலும் மாறுபட்ட பாணியில் அமைந்துள்ளது. அதன் அமைப்பு முறை அதற்கே உரித்தானது; விவாதிக்கும் பிரச்னைகள், விதிமுறைகள் ஆகியனயாவும் இதர இலக்கிய நூல்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டிருக்கின்றன; எனவே பொதுவாக நூலைப்பற்றி உங்கள் மனதில் குடியேறியுள்ள கருத்து இந்த நூலை ஆய்ந்து உணரத் துணையாயிராது என்பது மட்டுமல்ல, அது இவ்வழியில் ஒரு தடைக்கல்லாகவே இருக்கும். எனவே இதை உய்த்துணர்ந்து கொள்ள நீங்கள் விரும்பினால் நூல்களின் அமைப்பு பற்றி உங்கள் மனதில் ஏற்கனவே குடிபுகுந்திருக்கும் கருத்துகளை அகற்றி விடுங்கள்; பிறகு இந்த நூலில் அமையப் பெற்றிருக்கும் வினோதமான தன்மைகளைப் பற்றிய விவரங்களைத் தெரிந்துகொள்ளுங்கள்'' என்று அதனைப் படிக்கத் துவங்கும் முன்பே குர்ஆனை ஆய்பவர்களுக்குத் தெளிவுபடுத்தி விட்டால் அவர்கள் இந்த வழிமாறாட்டத்திலிருந்து காக்கப்படுவார்கள்.

திருக்குர்ஆனைப் படிக்க முற்படுவோர், யாவற்றுக்கும் முன்பாக அதனுடைய அடிப்படையை நன்கு அறிந்துகொள்ள வேண்டியது மிகவும் அவசியமாகும். அதன் மீது அவர் நம்பிக்கை கொள்ளலாம் ; கொள்ளாமலுமிருக்கலாம். ஆனால் திருக்குர்ஆனைப் படித்துணர வேண்டுமாயின் எந்த விஷயத்தைத் தனது அடிப்படையென்று அது கூறுகிறதோ, அதனைச் சமர்ப்பித்தவர் (முஹம்மத் (ஸல்) அவர்கள்) எதனை அதனுடைய அடிப்படையென்று தெளிவுபடுத்தினார்களோ அதனையே இந்த மறையின் அடிப்படையென்று முதலில் ஏற்றுக்கொண்டு மேலே படிக்க முனைவது அவசியமாகும். அந்த அடிப்படை விஷயங்களாவன:

(1) சர்வ வல்லமையுள்ள இறைவன் இப்பிரபஞ்சத்தின் படைப்பாளனும், உரிமையாளனும், ஆணையாளனுமாயிருக்கின்றான். அவனே தன்னுடைய பேரரசின் ஒரு பகுதியான இப்பூமியில் மனிதனைத் தோற்றுவித்து உணரவும், சிந்திக்கவும்,

அறியவும் வேண்டிய ஆற்றலை அவனுக்கு அளித்தான். நல்லது எது, தீயது எது என்று பகுத்துணரக்கூடிய அறிவைத் தந்தான். பிறகு அவற்றிலிருந்து எதை வேண்டுமானாலும் தேர்ந்தெடுத்துக் கொண்டு செயல்படச் சுதந்திரமும் அருளினான். வாழ்க்கைச் சாதனங்களைப் பயன்படுத்த உரிமைகளை வழங்கினான். சுருக்கமாகச் சொல்வதென்றால், மனிதனுக்கு ஒருவகைப்பட்ட சுயாதிகாரத்தைத் (Autonomy) தந்து, அவனை இப்பூவுலகில் தன்னுடைய பிரதிநிதியாய் (Vicegerent) ஆக்கினான்.

(2) மனிதனைத் தன் கலீஃபாவாக (பிரதிநிதியாக) நியமித்த பொழுது மனதில் நன்றாகப் பதியும் வகையில், அவனுடைய நிலை பற்றிய அடிப்படைகளைத் தெளிவாக இறைவன் அறிவித்து விட்டான். ''உங்களுடையவும், அனைத்துலகங்களுடையவும் உரிமையாளனும், வணக்கத்திற்குரியவனும், ஆணையாளனும் நான்தான்: என்னுடைய இந்தப் பேரரசில் நீங்கள் சுயாதிகாரம் படைத்தவர்களல்லர். பிறருக்கு அடிமைப்பட்டவர்களுமல்லர்; நீங்கள் கீழ்ப்படிவதற்கும், அடிபணிவதற்கும், வணங்குவதற்கும் உரியவன் என்னைத் தவிர வேறு யாருமில்லை; உங்களுக்குச் சில அதிகாரங்கள் வழங்கப்பட்டு நீங்கள் இவ்வுலகத்துக்கு அனுப்பப்படுகிறீர்கள். உண்மையில் இது ஒரு பெரிய தேர்வுக் காலமாகும்; இது ஒரு குறித்த காலம் வரை நீடிக்கும்; அதன் பின்னர் நீங்கள் என்னிடமே திரும்பி வரவேண்டியவர்களாய் இருக்கின்றீர்கள். அப்பொழுது உங்களுடைய செயல்களைப் பரிசீலித்து உங்களில் யார் தோல்வியடைந்தார்கள் என்று தீர்ப்பு வழங்குவேன்; எனவே வணங்குவதற்கும், ஆணை பிறப்பிப்பதற்கும் உரிய ஏக இறைவன் என்று என்னை ஏற்றுக் கொண்டு நான் இறக்கியருளிய அறிவுரைகள், வழிகாட்டுதலுக்கு ஏற்ப இப்பூவுலகில் செயல்படுவதுதான் உங்களுக்குரிய நேரிய வழியாகும்; மேலும் நீங்கள் இவ்வுலகைத் தேர்வுக்கூடமாகக் கருதி வாழ்க்கை நடத்த வேண்டும்; மறுமையில் என்னுடைய இறுதித் தீர்ப்பில் வெற்றி பெறுவதே உங்கள் வாழ்வின் அடிப்படை நோக்கமாக அமைய வேண்டும்; இந்த உணர்வை

உள்ளத்தில் கொண்டு மேற்சொன்ன உண்மையின் அடிப்படையில் வாழ்வதே உங்களுக்குரிய சீரிய-நேரிய ஒழுங்குமுறையாகும். இதற்கு மாற்றமாக இவ்வுலக வாழ்வில் நீங்கள் மேற்கொள்ளும் ஒவ்வொரு போக்கும் மிகத் தவறானதாகவே இருக்கும். முதலில் சொல்லப்பட்ட நேரிய வழியை நீங்கள் மேற்கொண்டால் (அதை மேற்கொள்ள உங்களுக்கு முழுச் சுதந்திரம் உண்டு) உலகில் அமைதியும், பாதுகாப்பும் உங்களுக்குக் கிடைக்கும். மேலும் என்னிடம் திரும்பி வரும்போது ஜன்னத் - சொர்க்கம் என்று சொல்லப்படும் நித்திய சுகத்தையும், நிலையான பேரின்ப வீட்டையும் உங்களுக்கு அளிப்பேன். ஆனால் அந்த ஒழுங்கு முறையை விட்டு நீங்கள் வேறு முறையில் நடந்தால் (அவ்வாறு நடக்கவும் உங்களுக்க முழுச் சுதந்திரம் உண்டு) உலகில் குழப்பம், அமைதியின்மை ஆகியவற்றையே நீங்கள் சுவைக்க வேண்டியிருக்கும்! பிறகு இவ்வுலகை விட்டு என்னிடம் மீளும்போது நீங்காத துயரமும், வேதனையுமுடைய நரகம் எனும் படுகுழியில் தூக்கி எறியப்படுவீர்கள்!'' என்று இறைவன் எச்சரித்து விட்டான்.

(3) இவ்வாறு எச்சரித்த பிறகு, பூவுலகின் முதல் மனிதர்களான ஆதம் (அலை), ஹவ்வா ஆகிய இருவருக்கும் அவர்களும்-அவர்களுடைய சந்ததியினரும் பின்பற்றிச் செயல்பட வேண்டிய அறிவுரைகளை வழங்கி உலகில் தோன்றச் செய்தான். ஆதி மனிதர்களான இவ்விருவரும் இருளிலும் அறியாமையிலும் தம் கண்களைத் திறக்க வில்லை. மாறாக, முழுமையான அறிவொளி நிறைந்ததாய்த்தான் இறைவன் அவர்களுடைய உலக வாழ்க்கையைத் தொடங்கச் செய்தான். வாழ்வின் உண்மைகளை அவர்கள் அறிந்தேயிருந்தார்கள். வாழ்வின் நெறி அவர்களுக்குக் காண்பித்துக் கொடுக்கப்பட்டேயிருந்தது. இறைவனுக்கு அடிபணிவதாக (இஸ்லாமாக)வே அவர்களுடைய வாழ்க்கைமுறை அமைந்திருந்தது. மேலும் இறைவனுக்கு அடிபணிபவர் (முஸ்லிம்) களாகவே வாழுங்கள் என்று தம்முடைய வழித்தோன்றல்களுக்கு அவர்கள் அறிவுறுத்திச் சென்றிருந்தனர்.

ஆனால் படிப்படியாக, பிந்திய நூற்றாண்டுகளில் அவர்களின் வழித்தோன்றல்கள் இந்த நேரிய சீரிய நெறிமுறையை (தீனை) விட்டு வழுவித் தவறான பல்வேறு பாதைகளில் செல்லத் தலைப் பட்டனர். அசட்டையினாலும், விழிப்பின்மையினாலும் அந்த வழிகாட்டுதலை கைநழுவ விட்டுவிட்டனர். மேலும் தம் குறும்புத்தனத்தால் அதனை அலங்கோலப்படுத்திக் குழப்பி விட்டனர். இறைமையுடன் பல்வேறு மனிதர்களையும் இணை வைத்தனர். சில சமயம் பல இயற்கைப் படைப்புகளையும், தம் கற்பனையில் உதித்த உருவங்களையும் இறைவனுடன் இணை யாக்கிக் கொண்டனர். அவர்கள் இறைவன் அளித்த அந்த உண்மை (அல் இல்மு - The Knowledge) அறிவுடன் விதவிதமான மூடநம்பிக்கைகளையும், கோட்பாடுகளையும், தத்துவங்களை யும் கலந்து எண்ணற்ற மார்க்கங்களை உண்டுபண்ணினர். இறைவன் நிர்ணயித்துள்ள நீதிமிக்க - நேர்மையான சமுதாய அமைப்புக்கு வேண்டிய ஒழுக்க நியதிகளைக் (ஷரீஅத்தை) கைவிட்டு விலகி, அதனை அலங்கோலப்படுத்தி, அதற்குப் பதிலாகத் தம் இச்சைகளுக்கும், விருப்பு வெறுப்புகளுக்கும் ஏற்ப வாழ்வின் சட்டதிட்டங்களை இயற்றிக் கொண்டனர். இதனால் இறைவனுடைய பூமி அநீதியாலும், கொடுமைகளாலும் நிரம்பி விட்டது.

(4) நேரிய வாழ்க்கைநெறியிலிருந்து பிறழ்ந்து குழப்பங்களை விளைவித்துக் கொண்டிருக்கும் மனிதனைப் பலவந்தமாக நேர்வழியின் பக்கம் இட்டுச் செல்வது இறைவன் மனிதனுக்கு வழங்கியிருக்கும் கட்டுப்பாடுள்ள சுதந்திரத்துக்கு இசைவாக இராது. எனவே, நேர்வழியில் செல்லும்படி மனிதனை கட்டாயப் படுத்த இறைவன் தன் சக்திகளைப் பயன்படுத்தவில்லை. மேலும் இந்த இனத்துக்கு - இதில் தோன்றும் சமுதாயங்களுக்கு செயல் படும் ஒரு வரம்பை இறைவன் நிர்ணயித்துள்ளான். மனிதர்கள் இறைநெறியை எதிர்த்து நடக்கத் தலைப்பட்ட உடனேயே அவர் களை அழித்துவிடுவது இறைவன் நிர்ணயித்துள்ள செயல்படும் காலத்தவணைக்கு இசைவுடையதாய் இராது. எனவே இறை

நெறியிலிருந்து முகம் திருப்பிச் செல்லும் மனிதர்களை இறைவன் உடனடியாக அழிக்கவுமில்லை; நேர்வழியின் பால் திரும்பிவரக் கட்டாயப்படுத்தவுமில்லை. இவற்றுக்குப் பதிலாக இவ்வுலகில் மனித வாழ்க்கை தோன்றிய காலந்தொட்டு அவனுடைய கட்டுப்பாடுள்ள சுதந்திரத்தை மதித்து, தேர்வுக்கூடமான இவ்வுல கில் செயல்படுவதற்கு அவனுக்குரிய காலகட்டத்தில், அவனுக்கு நேர்வழி கிடைப்பதற்குரிய ஏற்பாடுகளைச் செய்து கொண்டே யிருக்கும் பொறுப்பை இறைவன் ஏற்றுக்கொண்டான். தன்மீது தானே விதித்துக்கொண்ட இப்பொறுப்பை நிறைவேற்றுவதற் காக தன்மீது நம்பிக்கை (ஈமான்) கொண்ட தன் விருப்பத்தையே நாடிச் செயல்படுகிற நல்லடியார்களைத் தேர்ந்தெடுத்தான். அவர்களைத் தன் தூதர்களாய் நியமித்தான். தன் செய்திகளையும் கட்டளைகளையும் அவர்களிடம் அனுப்பினான். வாழ்வின் அடிப்படை உண்மைகள் பற்றிய அறிவை அவர்களுக்கு அருளி னான்; சீரான வாழ்க்கை முறை, வாழ்க்கைச் சட்டதிட்டங்கள் ஆகியவற்றை அவர்களுக்கு வழங்கினான். ஆதமுடைய மக்களில் நேர்வழியிலிருந்து பிறழ்ந்து சென்ற மனிதர்களை ஆதியில் அவர்களுக்குக் காண்பிக்கப்பட்ட அதே நேர்வழியின் பால் அழைக்கும் பணியில் அத்தூதர்களை நியமித்தான்.

(5) இந்த இறைத்தூதர்கள் பல சமுதாயங்களிலும் பல நாடுகளிலும் தோன்றினார்கள். ஆயிரக்கணக்கான ஆண்டுகள் தொடர்ச்சியாக இறைத்தூதர்கள் வந்து கொண்டேயிருந்தனர். ஆயிரமாயிரம் எண்ணிக்கையில் அவர்கள் அனுப்பப்பட்டனர். அவர்கள் அனைவருக்கும் 'தீன்' ஒன்றாகவேயிருந்தது. அதாவது வாழ்வின் சீரிய ஒழுங்குமுறை என்று ஆதி மனிதருக்கு எது காண்பிக்கப்பட்டதோ அந்த முறையே சரியானது என்று இவர்களும் அறிவித்துக்கொண்டு வந்தனர். அவர்களனைவரும் ஒரே அறிவுரையையே பின்பற்றுபவர்களாய் இருந்து வந்தனர். அதாவது, உலக வாழ்வின் ஒழுக்கவியல், சமூகவியல் ஆகிய வற்றுக்கு எந்த நிலையான அடிப்படை விதிகள் ஆதிமனிதருக்குக் காண்பிக்கப்பட்டனவோ அவற்றையே இவர்கள் பின்பற்றி

நடப்பவர்களாய் இருந்தனர். இவர்களனைவருக்கும் வாழ்க்கைக் குறிக்கோள், பணி (Mission) ஒன்றாகவே இருந்தது. அதாவது இந்த தீனின் - வழிகாட்டுதலின் பக்கம் வருமாறு மக்கள் குலத்துக்கு அழைப்பு விடுப்பதும், பின்னர் அந்த அழைப்பை ஏற்றுக்கொண்டோரை ஒரு குழுவி(உம்மத்தி)னராய் அமைத்து விடுவதுடன் அக்குழுவினரைச் சுயமாக தம் வாழ்வில் இறைவனுடைய சட்டதிட்டங்களுக்கு உட்பட்டு இருக்கச் செய்வதும், உலகில் இறைச்சட்டத்துக்கு இசைந்த வாழ்வை நிலைப்படுத்தச் செய்வதும், அச்சட்டதிட்டங்களுக்கு மாறு செய்ய முற்படுவோரைத் தடுக்கப்பாடுபடச் செய்வதுமே அத்தூதர்கள் அனைவரின் ஒரே குறிக்கோளாய் இருந்தது. இவ்வாறு வந்த நபிமார்கள் (இறைத்தூதர்கள்) அவரவர் காலங்களில் தங்களுடைய இந்தக் குறிக்கோளை மிகவும் அழகாக நிறைவேற்றி வைத்தார்கள். ஆனால் எப்போதும் மனித சமுதாயத்தின் ஒருபெரும் பகுதி அவர்களின் அழைப்பை ஏற்றுக்கொள்ளவேயில்லை. நபிமார்களின் அழைப்பை ஏற்றுக்கொண்டு, ‘உம்மத்தே முஸ்லிமா’ (அந்த அழைப்பை ஏற்றுக்கொண்டு கட்டுப்பாடான முறையில் வாழும் குழு)வாகத் திகழ்ந்தோரும் காலப்போக்கில் பல பிணிகளுக்கு ஆளாயினர். இவை எதுவரை முற்றிவிட்டிருந்தனவென்றால் அவர்களில் சில பிரிவினர் இறைவன் அருளிய வாழ்க்கை நெறியைக் கைநழுவவிட்டனர் : சிலரோ, இறைவழிகாட்டுதலைத் திருத்தி, மாற்றிப் பல கலப்படங்களைச் செய்து, அதனை அலங்கோலப்படுத்திக் குழப்பிவிட்டனர்.

(6) இறுதியாக, அனைத்துலகங்களின் இறைவன், முஹம்மத் (ஸல்) அவர்களை அரபு நாட்டில் தோற்றுவித்தான். முந்திய நபிமார்கள் எந்தப் பணிக்காக அனுப்பப்பட்டனரோ அதே பணியை நிறைவேற்றும் பொறுப்பில் அண்ணல் நபி (ஸல்) அவர்களை அமர்த்தினான். அவர்கள் இதற்குமுன் இறைவேதம் அருளப்படாத மக்கள் அனைவரையும், முந்தைய நபிமார்கள் மூலமாக நேர்வழியைப் பெற்று அதிலிருந்து நழுவிவிட்டவர்களையும் நோக்கித் தம் அழைப்பை விளக்கினார்கள். ஆதிமனி

தருக்குக் காண்பிக்கப்பட்ட அதே நேரிய வாழ்க்கை முறையை மேற்கொள்ளும்படி அனைவருக்கும் அழைப்புவிடுத்து இறைவனுடைய அறிவுரையை அனைவரிடமும் எட்டச் செய்து அதனை ஏற்றுக்கொள்வோரை, ஒருபுறம் தங்கள் வாழ்க்கையை இறைநெறியின் அடிப்படையில் அமைத்துக் கொள்ளவும், மறுபுறம் அதற்கு இசைவாக உலகைச் சீர்திருத்தவும் பாடுபடக் கூடிய ஒரு குழுவாக (உம்மத்தாக) அமைத்து விடுவதுதான் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் ஒப்படைக்கப்பட்ட பணியாக இருந்தது. மேற்சொன்ன அழைப்பையும் நல்லுரையையும் கொண்ட வேத நூல்தான் அல்லாஹ், முஹம்மத் (ஸல்) அவர் களுக்கு அருளிய அல்குர்ஆன் ஆகும்.

## மையக் கருத்தும் இலக்கும்

திருக்குர்ஆனின் இந்த அடிப்படையைத் தெரிந்து கொண்ட பின், அது விவாதிக்கும் பொருள் (Subject) என்ன, அதன் மையக் கருத்து என்ன, அதன் குறிக்கோள் என்னவென்பதைப் பற்றி எளிதில் அறிந்துகொள்ள முடியும்.

அது விவாதிக்கும் பொருள் (Subject) மனிதனைப் பற்றிய தாயிருக்கிறது. எனவேதான் மனிதனின் வெற்றியும் நற்பேறும், அவனுடைய வீழ்ச்சியும் இழப்பும் எந்த அம்சங்களில் அமைந் துள்ளன என்பதை அது விரிவாக ஆராய்கிறது.

இதன் மையக் கருத்து இதுதான் : இறைவன், பிரபஞ்சத்தின் அமைப்பு முறை, இவற்றில் மனிதனுடைய நிலை, அவனுடைய இந்த உலக வாழ்வு ஆகியவை பற்றி தன் புலனுணர்விற்கு உட்பட்டவற்றை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு மனிதன் ஏற்படுத்திக்கொண்ட கோட்பாடுகள், அல்லது தன் கற்பனை களுக்கு ஏற்ப உருவாக்கிக் கொண்ட தத்துவங்கள், அல்லது மன இச்சைகளுக்கு அடிமைப்பட்டு வகுத்துக்கொண்ட கருத் தோட்டங்கள் ஆகியன யாவுமே அடிப்படையில் தவறான வையாய் இருக்கின்றன. மேலும் அவற்றுக்கு இசைவாக மனிதன்

மேற்கொள்ளும் வாழ்வின் போக்கு ஒவ்வொன்றும் முற்றிலும் தவறானதாகவே இருக்கிறது; விரும்பத்தகாத விளைவுகளை உண்டுபண்ணக்கூடியதாகவும், அழிவைத் தரக்கூடியதாயுமிருக்கிறது. இவற்றுக்கு மாறாக மனிதனைத் தன்னுடைய பிரதிநிதியாக (கலீஃபாவாக) நியமிக்கும் போது இறைவன் அவனுடைய நிலை பற்றி அவனுக்கு அறிவித்தவையே முற்றிலும் உண்மையானவையாகும். அந்த உண்மையின் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும் போது நான் முந்தைய பக்கங்களில் ''வாழ்வின் சீரிய - நேரிய போக்கு'' என்று விவாதித்துள்ள வாழ்க்கை ஒன்று மட்டுமே மனிதனுக்குரிய நேரிய வாழ்க்கை அமைப்பாகும். அதை மேற்கொண்டால்தான் அவனுடைய இறுதி முடிவு வெற்றியுடையதாயும், நற்பேறு கொண்ட தாயுமிருக்கும் எனப் புலனாகின்றது.

இதன் குறிக்கோள் என்னவெனில், மனிதனை இந்த நேர்வழியின்பால் அழைப்பதும், எந்த வழிகாட்டுதலை மனிதன் தன் விழிப்பின்மையினாலும், அசட்டுத்தனத்தாலும், இழந்து விட்டானோ அல்லது தன் குறும்புத்தனத்தால் அலங்கோலப் படுத்திவிட்டானோ அந்த வழி காட்டுதலை மீண்டும் அவனுக்குத் தெளிவாக எடுத்துரைப்பதும்தான்.

இந்த மூன்று அடிப்படைகளையும் கருத்தில் கொண்டு குர்ஆனைப் படித்தால் இத்திருவேதம் தன் உள்ளடக்கம், தன் மையக் கருத்து, தன் குறிக்கோள் ஆகியவற்றிலிருந்து ஒரு நூலிழைகூட மாறிச் செல்லவில்லையென்பது புலனாகும். ஒரு மணியாரத்தில் சிறிதும் பெரிதுமான பல நிற மணிகள் கோர்க்கப் பட்டிருப்பது போல், ஆரம்பம் முதல் இறுதிவரை இந்தத் திருமறையில் சர்ச்சை செய்யப்பட்டுள்ள பல்வேறு கருத்துகள் அதன் மையக்கருத்துடன் இணைந்திருக்கின்றன என்பது தெளிவாகும். வானம், பூமி ஆகியவற்றின் அமைப்பு, மனிதனைப் படைத்தல், பிரபஞ்சத்தின் சான்றுகள், சென்றுபோன சமுதாயங்களின் வரலாற்று நிகழ்ச்சிகள் ஆகியவை பற்றியெல்லாம் இத்திருமறை பேசுகிறது. பல்வேறு சமுதாயங்களின் கோட்பாடுகள்,

ஒழுக்கவியல், பழக்க வழக்கங்கள், செயல்முறைகள் பற்றியெல்லாம் அது விமர்சிக்கிறது. புலனுணர்விற்கு அப்பாற்பட்ட விஷயங்கள், பிரச்னைகள் ஆகியவற்றுக்கு விளக்கங்கள் தருகிறது. இன்னும் பல பொருள்கள் பற்றியும் விவரிக்கிறது. ஆனால் இயற்கைப் பாடம் கற்பிப்பதோ - வரலாறு, தத்துவம் ஆகிய கலைகளில் தேர்ச்சி பெறச் செய்வதோ - இதர கலைகளில் எது ஒன்றைப் பற்றியும் கற்றுத் தருவதோ இத்திருவேதத்தின் நோக்கமன்று. மாறாக வாழ்வின் உண்மைகளைப்பற்றி மனிதன் ஏற்படுத்திக்கொண்டுள்ள தவறான எண்ணங்களைப் போக்கி அவனுடைய உள்ளத்தில் அடிப்படை உண்மைகளை வேரூன்றச் செய்வதுதான் அதன் நோக்கமாகும்.

உண்மைக்கு மாறான வாழ்க்கைப் போக்குகளின் தவற்றையும் - அதனால் இறுதியில் ஏற்படும் இழப்பையும் தெளிவாக எடுத்துரைத்து, உண்மைகளுக்கு இயைந்த - இறுதியில் வெற்றியையும் நற்பேற்றையும் அளிக்கக்கூடிய வாழ்க்கைமுறைகளை மேற்கொள்ளும்படி அழைப்புப் கொடுப்பதே அதன் தலையாய நோக்கமாகும். இதனாலேயே தன் இலக்கையும் நோக்கையும் தெளிவாக்க எந்த அளவுக்கு ஒரு விஷயத்தைப் பற்றிய விவரம் தேவைப்படுகிறதோ அந்த அளவுக்குத்தான் அதனை அது குறிப்பிடுகிறது. தேவையான அளவுக்கு இந்த விவரங்களைக் குறிப்பிட்ட பின் தன் நோக்கத்துக்கு தொடர்பில்லாதவற்றின் விவரங்களையும், விளக்கங்களையும் தருவதை நிறுத்தி விட்டுத் தன்னுடைய நோக்கம், மையக்கருத்து ஆகியவற்றின் பால் திரும்பி விடுகிறது. எனவே அதனுடைய விளக்கங்கள் முழுவதும் ஒருமித்தனவாய் இந்த ‘அழைப்பை’ மையமாகக் கொண்டு வட்டமிட்டுச் செல்கின்றன.

### குர்ஆன் அருளப்பட்ட சூழ்நிலையும் வாக்கியங்களின் பின்னணியும்

குர்ஆன் அருளப்பட்ட சூழ்நிலையையும் மேற்சொல்லப்பட்ட அதன் தன்மைகளையும் நன்கு அறிந்து கொள்ளாவிட்டால்

அதனுடைய பாணியையும், அதன் தொகுப்புமுறையையும் இன்னும் அதில் விவாதிக்கப்பட்டுள்ள பலதரப்பட்ட பிரச்னை களையும், கருத்துகளையும் நன்றாகவும் தெளிவாகவும் ஒரு போதும் புரிந்து கொள்ள முடியாது.

இஸ்லாமிய இயக்கத்தின் ஆரம்பக்கட்டத்தில் மக்களை ஒரு குறிப்பிட்ட வாழ்க்கை நெறியின்பால் அழைக்க அல்லாஹுத ஆலாவினால் முழுமையாக எழுதப்பட்டு, ஒரே நேரத்தில் முஹம்மத் (ஸல்) அவர்களிடம் ஒப்படைக்கப்பட்ட நூலன்று இது. மேலும் இது சாதாரணமாக இயற்றப்படும் நூல்களைப் போல ஓர் அடிப்படைக் கருத்து அல்லது கட்டுரைத் தலைப்பு ஒன்றை வைத்துக் கொண்டு விவாதிக்கும் நூலுமன்று. எனவே தான் சாதாரண நூலில் காணப்படும் தொகுப்பு முறையையோ, வாசகத்தின் அமைப்பையோ நாம் இதில் காண முடியாது. உண்மையில் இதன் தன்மை என்னவென்றால் இதனை அல்லாஹுதஆலா அரபு நாட்டின் ஒரு நகரான மக்காவில் தன் நல்லடியார் ஒருவரைத் தூதுத்துவப் பணி செய்யத் தேர்ந்தெடுத்து. ''உம் நகரில் உம் குலத்தார்க்கு (குறைஷிகளுக்கு) இந்த அழைப்பை விடுப்பதின் மூலம், இப்பணியைத் தொடங்கு வீராக!'' என்று கட்டளையிட்டான். இப்பணிக்காகத் தொடக் கத்தில் என்ன அறிவுரைகள் தேவையோ, அவை மட்டுமேதான் கொடுக்கப்பட்டன. அவற்றில் கீழ்க்காணும் மூன்று விஷயங்கள் முதன்மையாக வலியுறுத்தப்பட்டன.

**ஒன்று :** நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களிடம் ஒப் படைக்கப்பட்ட மகத்தான பணியைச் செம்மையாக நிறைவேற்ற எவ்வாறு தம்மைத் தாமே தயார் செய்து கொள்ள வேண்டு மென்றும், எந்த முறையில் இப்பணியை ஆற்றவேண்டுமென்றும் அறிவுரைகள் வழங்கப்பட்டன.

**இரண்டு :** மனித வாழ்வின் உண்மைகள் பற்றிய அடிப் படையான விஷயங்கள் தரப்பட்டன. அன்றைய சூழ்நிலையில்

மக்கள், மனித வாழ்வின் அடிப்படைகளைப்பற்றி ஏற்படுத்திக் கொண்டிருந்த தவறான கருத்துகளையும் அவற்றின் காரணமாக அவர்கள் மேற்கொண்டிருந்த வாழ்வின் தவறான நடைமுறை களையும் சுருக்கமாக எடுத்துரைத்து அவற்றை அகற்ற வேண்டிய தற்கான அறிவுரைகள் கொடுக்கப்பட்டன.

***மூன்று :*** வாழ்வின் நேரிய, சீரிய ஒழுங்கு முறையின் பால் அழைப்பும், இறைவனின் வழிகாட்டுதலுக்கொப்ப அமை யக்கூடியதும் மனிதனுக்கு நிறைவுடைய, செழுமைமிக்க வாழ் வைத் தரக்கூடியதுமான ஒழுக்கவியலின் அடிப்படைகள் பற்றிய விவரங்களும் அருளப்பட்டன.

## இஸ்லாமிய இயக்கத்தின் முதற்கட்டம்

இந்தத் தொடக்க கால அறிவுரைகள் சுருக்கமான சிறுசிறு வாக்கியங்கள் கொண்டவையாய் இருந்தன. அதன் மொழி மிகவும் இனிமையுடையதாயும், கவர்ச்சியுடையதாயும், இலக்கிய நயம் கொண்டதாயும், சக்தி வாய்ந்ததாயும் இருந்தது. மேலும் எந்தச் சமுதாயத்தை நோக்கி அழைப்பு விடுக்கப் பட்டதோ அதனுடைய இலக்கியச் சுவைக்கு ஏற்ப உன்னதமான நடையில் அமைந்திருந்தது. கேட்போரின் உள்ளங்களில் பசுமரத் தாணிபோல் பதிந்து விடும் அளவுக்கு அதன் இலக்கிய நயமும், வீச்சும் சக்தி வாய்ந்தவையாயிருந்தன. அதனைச் செவியுறுவோர், தாமாகவே அதன்பால் ஈர்க்கப்படுமளவுக்கு அதன் நடை இனிமை வாய்ந்ததாய் இருந்தது. அதனைக் கேட்போர் தாங்க ளாகவே அதன் வாக்கியங்களைத் திரும்பத் திரும்ப உச்சரித்து பரவசமடையும் அளவுக்கு அதன் இலக்கியப் பேரழகு அமைந் திருந்தது. இந்த அறிவுரைகள் எங்கு அருளப்பட்டனவோ, அப்பகுதியின் வாசனையே அதில் அதிகமாக வீசியது. உலகளா விய பேருண்மைகளைப்பற்றி அவை அறிவுறுத்துகின்றன என்றா லும் அவற்றுக்கு வேண்டிய சான்றுகள், நிரூபணங்கள், உவமை கள் எல்லாம் அம்மக்களைச் சுற்றி நெருங்கியிருந்த அவர்கள் நன்கு அறிந்திருந்த சூழ்நிலையிலிருந்தே எடுக்கப்பட்டவையாய்

இருந்தன. அந்த மக்களிடம் இந்த அறிவுரைகளின் பயனும் விளைவும் சரிவர ஆழமாக வேரூன்ற வேண்டும் என்ற நோக்குடன் இந்தப் பேருண்மைகளை எடுத்துரைக்கும்போது அவர்களுடைய வரலாறு, அவர்களுடைய மரபுகள், அன்றாடம் அவர்கள் அனுபவித்து வந்த விஷயங்கள், அவர்களுடைய சமயக் கோட்பாடு, ஒழுக்கவியல், அவர்களுடைய கூட்டுவாழ்வில் ஏற்பட்டிருந்த தீமைகள் ஆகியவை மட்டுமே விவாதிக்கப்பட்டிருந்தன.

இஸ்லாமிய இயக்க அழைப்பின் இந்த ஆரம்பக் கட்டம் ஏறத்தாழ நான்கைந்து ஆண்டுகள் வரையில் நீடித்தது. இந்தக் கட்டத்தில் நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களின் அழைப்புப் பணியால் மூன்றுவித விளைவுகள் தோன்றின.

(அ) ஸாலிஹான - நேர்மையுள்ளம் படைத்த சிலர் இந்த அழைப்பை ஏற்று அதன் அடிப்படையில் ஒரு குழு (உம்மத்தே முஸ்லிமா) வாகச் செயலாற்றத் தயாராதல்.

(ஆ) குறைஷி மக்களில் பெரும்பாலோர் அறியாமையினால், அல்லது தமது சுயநலத்தால், அல்லது தங்கள் மூதாதையர்களின் வழிமுறைகளில் கொண்டிருந்த பற்றின் காரணத்தால் இந்த அழைப்பை எதிர்க்கத் தலைப்படல்.

(இ) இந்த இயக்க அழைப்பின் குரல், மக்காவைத் தாண்டியும், குறைஷிகளுடைய எல்லையைத் தாண்டியும் பல்வேறு பகுதிகளில் எட்ட ஆரம்பித்தல்.

## மக்காவில் அருளப்பட்ட வசனங்களின் பின்னணி

இங்கிருந்து இந்த அழைப்பின் - இயக்கத்தின் இரண்டாவது கட்டம் தொடங்கலாயிற்று. இக்கட்டத்தில் இஸ்லாமிய இயக்கத்துக்கும் அஞ்ஞான மரபுக்கும் இடையில் கடும் போராட்டம் தொடங்கியது. இப்போராட்டம் தொடர்ந்து ஒன்பதாண்டு காலம் நீடித்தது. குறைஷிகள் மட்டுமல்ல; அஞ்ஞானத்தைக் கட்டிக்

காக்க உறுதி பூண்டெழுந்த, அரபு நாட்டிலுள்ள அனைவருமே பலாத்காரமாக இந்த இயக்கத்தை நசுக்கிவிடக் கங்கணம் கட்டினர்! இதை ஒழிப்பதற்கு எல்லா வகையான கருவிகளையும் அவர்கள் பயன்படுத்தத் தொடங்கினர். பொய்ப் பிரச்சாரம், குற்றச் சாட்டுகள், ஐயப்பாடுகளைக் கிளப்புதல், ஆட்சேபணைகள் - ஆகிய அனைத்தையும் அவிழ்த்து விட்டனர். சாதாரண பாமர மக்களின் உள்ளங்களில் விதவிதமான சந்தேகங்களை விதைத் தனர். மேலும் இந்த இயக்கத்துடன் அந்தப் பாமர மக்கள் தொடர்பு கொள்ளாமலிருக்க எல்லாவிதமான முயற்சிகளையும் மெற்கொள்ளத் தொடங்கினர். அந்த மக்களை அண்ணல் பெருமானார் (ஸல்) அவர்களின் பேச்சைக் கேட்காதவாறு தடுக்க முயன்றனர். இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டோரைப் பயங்கரமாக - மிருகத்தனமாகக் கொடுமைப்படுத்தினர். அவர்களை வாழ விடாமல் செய்வதற்காக அவர்களுடைய பொருளாதார, சமுதாய வாழ்வைச் சீர்குலைத்து நசுக்க முயன்றனர். அவர்கள் எந்த அளவுக்குக் கொடுமைப்படுத்தினார்களென்றால் அந்த முஸ்லிம் கள் இரு தடவை தங்கள் வீடுவாசல்களை விட்டு வெளியேறி அபிஸீனியாவில் சென்று குடியேறும் அளவுக்குக் கொடுமைப் படுத்தப்பட்டனர். இறுதியாக இந்த அழைப்பை ஏற்றவர்கள் மக்காவை நிரந்தரமாகத் துறந்து மதீனாவில் குடியேறும் கட்டாய நிலைக்கு ஆளாயினர். ஆனால் இடையூறுகளுக்கும் கொடுமை களுக்கும் இடையேயும் இந்த இயக்கம் விரிவாகப் பரவிக் கொண்டே போயிற்று.

அன்று மக்கா நகரில் இந்த இயக்க வளர்ச்சியினால் பாதிக் கப்படாத எந்த ஒரு வீடும் இருக்க வில்லை; ஒவ்வொரு குடும்பத் திலும் குறைந்த பட்சம் யாரேனும் ஒருவர் இந்த அழைப்பை ஏற்று இதை மேலோங்கச் செய்திடப் பாடுபட்டுக் கொண்டிருந்தார். இந்த நிலைமை இஸ்லாத்தை எதிர்த்து வந்தவர்களின் பகை மையை இன்னும் கடுமையாக்கிவிட்டது. தம்முடைய சகோதரர் கள், தம் புதல்வர்கள், புதல்விகள், உறவினர்கள் ஆகியோர் இந்த

அழைப்பை ஏற்று அதற்காக உயிர்த் தியாகம் செய்ய முன் வந்ததையும் தம் இதயக் கண்மணிகள் இந்த இலட்சியத்திற்காகத் தம்மையே எதிர்த்துப் போராடத் தலைப்பட்டதையும் கண்டு அவர்களுடைய ஆத்திரம் மேலும் பொங்கி எழுந்தது. இஸ்லாத் துக்கு எதிராக அவர்கள் செய்து வந்த சொல்லொணாக்கொடு மைகளுக்கும் இதுவும் ஒரு காரணமாய் இருந்தது.

அஞ்ஞான வாழ்க்கை முறையை விட்டு இந்த இயக்கத்தில் தங்களைப் பிணைத்துக்கொண்டோர் அனைவரும் ஏற்கனவே தம் சமுதாயத்தில் சிறப்புடையோராகவே திகழ்ந்து வந்தனர். இந்த இயக்கத் தொடர்பு அவர்களுடைய சிறந்த பண்புகளுக்கு மேலும் மெருகூட்டி அவர்களை மிகவும் நேர்மையுடையோராகவும், நல்வழிப்பட்டோராகவும், உன்னதப் பண்புடையோராகவும் மாற்றியமைத்து விட்டது. எத்தகைய மக்களை இந்த இயக்கம் தன்பால் ஈர்த்து விடுகிறது, அவர்களை எத்தகைய மேம்பாடு உடையவர்களாய் மாற்றுகிறது என்பதைக் கண்கூடாகக் கண்டுவந்த உலகம், இந்த இயக்கம் எத்துணை வலிமை பெற்றது; மேம்பாடுடையது என்பதும் சிந்திக்கப்பட்டது. இந்த அம்சமும் இந்த இயக்கத்தின் வேகமான வளர்ச்சிக்கு ஒரு காரணமாக அமைந்தது.

இந்த நீண்ட கடுமையான போராட்டக் காலத்தில், அல்லாஹுதஆலா சந்தர்ப்பத்திற்கும், தேவைக்கும் ஏற்பத் தன் தூதருக்கு வீறுகொண்டெழச் செய்யும் நல்லுரைகளை அருளி னான். அவற்றில் தங்குதடையின்றிச் செல்லும் நீரோட்டத்தின் விறுவிறுப்பும், சீறிப்பாயும் வெள்ளத்தின் வேகமும், வலிமை யும், ஆர்த்தெழும் நெருப்பின் பாதிப்பும் ஆற்றலும் பொதிந்திருந் தன. ஒரு புறம் இந்த அறிவுரைகள் மூலம் ஈமான் கொண்டோ ருக்கு அடிப்படைக் கடமைகள் விளக்கப்பட்டன. அவர்களுக்கு மத்தியில் இயக்கக் கட்டுப்பாட்டு உணர்வு தோற்றுவிக்கப் பட்டது; இறையச்சம் (தக்வா), பண்பாட்டுச் சிறப்பு, வாழ்வின் தூய்மை ஆகியவை பற்றிய அறிவுரைகள் அருளப்பட்டன. சத்திய

தீனின் அழைப்புக்கான வழிவகைகள் எடுத்துக் காண்பிக்கப் பட்டன. வெற்றியின் வாக்குறுதிகளும், சுவர்க்க வாழ்வின் நற் செய்திகளும் கொண்டு அவர்களுக்கு ஊக்கமூட்டப்பட்டது. பொறுமையுடனும், உறுதியுடனும், பேரார்வத்துடனும் இறை வழியில் பாடுபடுவதற்கு உற்சாகமூட்டப்பட்டது. இலட்சியத்துக் காகத் தம்மை அர்ப்பணித்துக் கொள்ளும் தியாகத்தன்மைகள் அவர்களுக்குப் புகட்டப்பட்டன. இதன் காரணமாக அவர்கள் எந்தத் துன்பங்களையும் சகித்துக் கொள்ளவும், தம்மை நோக்கி வரும் எல்லாவித எதிர்ப்புப் புயல்களோடு மோதவும் தயாராயி ருந்தனர். மறுபுறம் இந்த இயக்கத்தை எதிர்த்தோர்க்கும், சத்தியத் திலிருந்து முகம் திருப்பிக் கொண்டிருந்தவர்களுக்கும், இறை நெறியைப் புறக்கணித்து உறக்கத்தில் ஆழ்ந்திருந்தோர்க்கும் இந்த உரைகளில் எச்சரிக்கை விடப்பட்டிருந்தது. அவர்கள் அறிந்திருந்த சமுதாயங்களின் வரலாற்று நிகழ்ச்சிகளை எடுத்துரைத்து அவர் கள் அச்சுறுத்தப்பட்டனர். தம் பயணங்களின்போது அவர்கள் கடந்த சென்று கொண்டிருந்த பாழடைந்த நகரங்களின் வரலாற் றைக் கூறி, அவற்றிலிருந்து படிப்பினை பெறும்படி அறிவுறுத்தப் பட்டனர். இரவும் பகலும் வானங்களிலும் பூமியிலும் அவர்கள் கண்முன் தோன்றிக் கொண்டிருந்த இயற்கைக் காட்சிகளிலிருந்து ஏகத்துவம், மறுமை ஆகியவை பற்றிய தெளிவான ஆதாரங்கள் கொடுக்கப்பட்டன. இணைவைத்தல், மறுமையை மறுத்தல் ஆகியன மிகத் தவறானவை என்று எடுத்துரைக்கப்பட்டன. மேலும் தாமே சுயாதிகாரம் பெற்றிருப்பதாகக் கூறிக்கொண்டு மனம்போன போக்கில் வாழ்வதும், மூதாதையர்களின் பழக்க வழக்கங்களைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றிக் கொண்டிருப்ப தும் எத்தகைய தவறான செயல் எனத் தக்க ஆதாரங்களுடன் விவரிக்கப்பட்டது. அந்த ஆதாரங்கள் உள்ளத்தை ஈர்ப்பனவாயும், சிந்தனையைக் கிளர்வனவாயும் இருந்தன. மேலும் அவர்களு டைய ஒவ்வோர் ஐயப்பாடும் அகற்றப்பட்டது. அவர்களுடைய ஒவ்வோர் ஆட்சேபத்துக்கும் அறிவார்ந்த விளக்கம் தரப்பட்டது.

தாங்களே சிக்கிக் கொண்ட அல்லது அவர்கள் பிறரைச் சிக்க வைக்க முயன்ற குழப்பங்கள் அவர்களுக்குத் தெளிவுபடுத்தப் பட்டன. இவ்வாறு அஞ்ஞானகால மரபுகள் அறிவு சார்ந்த உலகில் நிலைகொள்ள முடியாதவாறு அம்மக்கள் முன்னே எடுத்து விளக்கப்பட்டன. இத்துடன் அவர்களுக்கு இறைகோபம், இறுதித் தீர்ப்புநாளின் பயங்கரங்கள், நரக வேதனைகள் ஆகியவை பற்றியும் அச்சுறுத்தப்பட்டன. இன்னும் அவர்களின் தீய பண்புகள், தவறான வாழ்க்கை முறை, அஞ்ஞானப் பழக்க வழக்கங்கள், சத்தியத்தை எதிர்க்கும் போக்கு முஃமின்களுக்கு அவர்கள் இழைத்த கொடுமை ஆகியவை பற்றியும் அவர்கள் கண்டிக்கப்பட்டனர். இறைவனின் திருப்திக்கு இசைவான, தூய்மையான நாகரிகங்கள் ஆதிகாலத்திலிருந்தே எந்த ஒழுக்க, சமூக அடிப்படைகளில் தீர்மானிக்கப்பட்டு வந்திருக்கின்றனவோ அந்த அடிப்படைகள் அவர்களுக்குத் தெளிவாக்கப்பட்டன.

இந்த இரண்டாம் கட்டம் தன்னுள் பல்வேறு படித்தரங் களைக் கொண்டதாயிருந்தது. இதன் ஒவ்வொரு படித்தரத்திலும் இந்த இயக்கத்தின் அழைப்பு விரிவாகிக்கொண்டே போயிற்று. அதற்காக மிகவும் கடினமாகப் பாடுபட வேண்டிய கட்டாயமும் ஏற்பட்டது. மேலும் அதற்கேற்ப இடையூறுகளும், அடக்குமுறை களும் நாளுக்கு நாள் கடுமையாகிக்கொண்டே போயின. பல்வேறு கோட்பாடுகள், வாழ்க்கை முறைகள் ஆகியவற்றை மேற்கொண்டிருந்த மக்களுடன் தொடர்புகள் ஏற்பட்டன. இதற்கேற்பவே அல்லாஹ்தஆலா தன்னுடைய அறிவுரைகளை அருளினான். எனவேதான் இக்கட்டத்தில் அருளப்பட்ட வாக்கியங்களில் பல்வேறுபட்ட கருத்துகளும், விஷயங்களும் சர்ச்சை செய்யப்பட்டுள்ளன. ஆரம்பத்தில் வாக்கியங்களுக்கும் அவற்றிற்கு இடையே காணப்படும் மாறுபட்ட தோரணைக்கும், அமைப்புக்கும் இதுவே காரணமாகும். இந்த இயக்கத்தின் முதல் பதின்மூன்றாண்டுகளில் மக்கமாநகரில் அருளப்பட்ட வசனங் களின் பின்னணி இதுவேயாகும்.

## மதீனாவில் அருளப்பட்ட வசனங்களின் பின்னணி

மக்கமாநகரில் பதின்மூன்றாண்டுக் காலமாகப் பற்பல இடைறுகளுக்கிடையில் இயங்கிக் கொண்டிருந்த இந்த இஸ்லாமிய இயக்கத்துக்கு மதீனா மாநகரம் ஒரு புதிய தலைமையகமாக அமைந்தவிட்டது. இந்த இயக்கத்தின் அழைப்பை ஏற்று, அரபு நாட்டின் பல பகுதிகளில் பரவிக் கிடந்தவர்கள் அனைவரையும் ஒன்று திரட்ட மதீனா மாநகரம் மிகப் பொருத்தமான கேந்திரமாய்த் திகழ்ந்தது. எனவேதான் நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களும், இஸ்லாத்தைப் பின்பற்றிய பெரும்பாலோரும் ஹிஜ்ரத் செய்து (தம் ஊர், உற்றார், உடைமைகள் அனைத்தையும் துறந்து) மதீனா வந்தடைந்தார்கள். இவ்வாறாக இந்த இயக்கம் மூன்றாம் கட்டத்தில் அடியெடுத்து வைத்தது.

இந்தக் கட்டத்தில் சூழ்நிலைகள் முற்றிலும் மாறிவிட்டன. இந்த அழைப்பை ஏற்றுச் செயற்பட்ட 'உம்மத்தே முஸ்லிமா' - எனப்படும் குழு அதிகாரப்பூர்வமான ஓர் ஆட்சியை நிறுவுவதில் வெற்றி கண்டுவிட்டது. அஞ்ஞான மரபுகளின் காவலர்களோடு ஆயுதந்தாங்கிய போராட்டம் தொடங்கிற்று. முற்கால நபிமார்களின் 'உம்மத்து'கள் (அவர்களைப் பின்பற்றிய குழுவினர்) ஆன அன்றைய யூத, கிறிஸ்தவ சமுதாயங்களைச் சமாளிக்க வேண்டியதாயிற்று. இந்த அழைப்பை ஏற்று நின்ற 'உம்மத்தே முஸ்லிமா' எனும் குழுவிலும் நயவஞ்சகர்கள் நுழைந்து விட்டனர். உள்ளிருந்து கொண்டு அவர்கள் செய்து வந்த சூழ்ச்சிகளுக்கும், சதிகளுக்கும் ஈடுகொடுக்க வேண்டியிருந்தது. இத்தகைய இடையூறுகளுக்கு மத்தியில் இந்த இயக்கம் தொடர்ந்து பத்தாண்டுகள் போரிட்டுக் கொண்டிருந்தது. இறுதியில் அரபு நாடு முழு வதையும் தன் ஆட்சியின் கீழ்க் கொண்டு வந்து விட்டது. அத்துடன் உலகம் முழுமைக்கும் இஸ்லாமிய அழைப்பினை விடுப்பதற்கும் மனித இனத்தைச் சீர்திருத்துவதற்கும் ஏற்பட்டிருந்த முட்டுக்கட்டைகள் அகன்று அவற்றுக்கான வசதி வாய்ப்புகள் இவ்வியக்கத்திற்குக் கிட்டின.

இந்தக் கட்டத்திலும் பல்வேறு படித்தரங்கள் இருந்தன. ஒவ்வொரு படித்தரத்திலும் இந்த இயக்கத்துக்குத் தனிப்பட்ட சில சிறப்புத் தேவைகள் இருந்தன. இத்தேவைகளுக்கேற்ப அல்லாஹுதஆலா அவ்வப்பொழுது தன் திருவுரைகளை நபி (ஸல்) அவர்களுக்கு அருளினான். இத்திருவுரைகளில் சிலசமயம் தீப்பொறி பறக்கும் பேச்சின் தோரணை இருந்தது. சில சமயம் முடிமன்னனின் பிரகடனங்கள், ஆணைகள் ஆகியவற்றின் சொல் வண்ணமும், கம்பீரமும் தொனித்தது. சில சமயம் ஓர் ஆசிரியர், பயிற்றுவோர் ஆகியோரின் பேச்சுத் தரமும் நயமும் காட்சியளித்தன. சில சமயம் ஒரு சீர்திருத்தவாதியின் ஆக்ககரமான சாயல் தென்பட்டது. இயக்கம் எப்படி இயக்கப்பட வேண்டும், அரசு எவ்வாறு அமைக்கப்பட வேண்டும், பண்பாடும் தூய்மையும் கொண்ட சமூகம் எப்படி உருவாக்கப்பட வேண்டும், வாழ்வின் பல்வேறு துறைகள், எந்தவித முறைகள் - நியதிகள் ஆகியவற்றின் அடிப்படையில் நிர்வகிக்கப்பட வேண்டும் என்பன போன்ற விஷயங்களெல்லாம் தெளிவாக அறிவுறுத்தப்பட்டன.

மேலும் நயவஞ்சகர்களுடனும், இஸ்லாமிய அரசின் பாதுகாப்புக்கு உட்பட்ட திம்மி (இஸ்லாத்தை ஏற்றுக்கொள்ளாத அதே சமயம் இஸ்லாத்தின் ஆட்சியை ஏற்றுக்கொண்டவர்)களுடனும் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டுமென்பதும் விவரிக்கப்பட்டது.

வேதம் வழங்கப்பட்டவர்களுடன் (அஹ்லுல் கிதாப்) எத்தகைய தொடர்புகள் வைத்துக் கொள்ள வேண்டும், தம்மை எதிர்த்துப் போர் புரிந்து கொண்டிருக்கும் பகைவர்களுடனும், தம்முடன் ஒப்பந்தம் செய்து கொண்டுள்ள நேச நாடுகள், சமுதாயங்கள் ஆகியவற்றுடனும் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பன போன்ற பிரச்னைகளுக்கெல்லாம் இவ்வுரைகளில் விளக்கம் தரப்பட்டுள்ளன.

இஸ்லாமிய அழைப்பை ஏற்று அதன் மீது நம்பிக்கை (ஈமான்) கொண்டு கட்டுப்பாட்டுடன் இயங்கும் இந்தக் குழு,

பிரபஞ்சத்தைப் படைத்தாளும் இறைவனுடைய பிரதிநிதித்துவம், தன் மீது சுமத்தும் கடமைகளை ஆற்ற - தன்னை எவ்வாறு பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும் எனும் அறிவுரைகளும் அவற்றில் இடம் பெற்றுள்ளன. இப்பேருரைகளில் ஒருபுறம் முஸ்லிம்களுக்கு அறிவுரையும், பயிற்சியும் தரப்படுகின்றன ; அவர்களுடைய பலவீனங்கள் பற்றி எச்சரிக்கை செய்யப்படுகின்றது ; இறைவனின் பாதையில் தங்கள் உயிரையும், உடைமைகளையும் அர்ப்பணிக்க அவர்கள் ஊக்குவிக்கப்படுகிறார்கள். வெற்றியிலும் தோல்வியிலும், துன்பத்திலும் இன்பத்திலும், வளத்திலும் வறுமையிலும், அமைதியிலும் அச்சத்திலும் இவ்வாறான ஒவ்வொரு நிலையிலும் அதற்கேற்ற ஒழுங்கியல் பாடம் அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கப்படுகிறது.

இப்படி நபி (ஸல்) அவர்களுக்குப் பின் அவர்களின் வழி நின்று இந்த அழைப்பு, சீர்திருத்தம் ஆகிய பணிகளைச் செம்மையாக நிறைவேற்ற முஸ்லிம்களுக்குப் பயிற்சியளிக்கப்பட்டது. மறுபுறம் ஈமானை விட்டு அப்பால் நின்றோர், அஹ்லுல் கிதாப் எனப்படும் முன் வேதங்களைப் பெற்றிருந்தோரின் வழித்தோன்றல்கள், நயவஞ்சகர்கள், இந்த அழைப்பை மறுப்போர், இணைவைப்போர் ஆகிய அனைவர்க்கும் அவர்களுடைய பல்வேறுபட்ட நிலைகளுக்கேற்ப உண்மைகளை உணர்த்தவும், கனிவாக இந்த அழைப்பைச் சமர்ப்பிக்கவும் முயற்சி செய்யப்பட்டது. அவர்களின் நிலையைக் கடுமையாக விமர்சித்து நல்லுரை வழங்கவும், இறைவனின் தண்டனை குறித்து அவர்களுக்கு அச்சுறுத்தவும் கடந்தகால நிகழ்ச்சிகள், வரலாறு ஆகியவற்றைக் கொண்டு பாடம் புகட்டவும் முயற்சி செய்யப்பட்டது. அவர்கள் தம்முடைய தவறான போக்குகளில் உழன்று கொண்டிருப்பதற்கு ஒரு காரணமும் கூறமுடியாத அளவுக்கு இந்த இயக்கம் இவ்வாறான சான்றுகளையும், ஆதாரங்களையும் நிறைவாக அளித்துவிட்டது. இதுதான் மதீனா மாநகரத்தில் அருளப்பட்ட திருக்குர்ஆன் வசனங்களின் பின்னணியாகும்.

## ஓர் இயக்கத்திற்குரிய வேத நூல்

ஓர் இயக்கத்தின் அழைப்புக்காகத் திருக்குர்ஆன் அருளப் பட்டது என்பது மேற்சொன்ன விளக்கங்களிலிருந்து புலனாகும். அந்த இயக்கமும், அதன் அழைப்பும் தொடங்கி நிறைவு பெற இருபத்து மூன்றாண்டுகள் பிடித்தன. இந்தக் காலகட்டத்தில் இந்த இயக்கம் எந்தெந்தச் சூழ்நிலைகளில் வளர்ந்ததோ அவற்றின் பலதரப்பட்ட தேவைகளுக்கேற்பத் திருக்குர்ஆனின் பல்வேறு பகுதிகள் அருளப்பட்டன என்பதையும் மேற்குறிப்பிட்ட விவாதத்திலிருந்து தெளிவாகப் புரிந்து கொள்ளலாம். எனவே டாக்டரேட் பட்டம் வாங்குவதற்கு எழுதப்படும் ஒரு கட்டுரை யில் இருக்கும் அமைப்பையும் தொடர்பையும் இத்திருமறையில் காணமுடியாது என்பது வெளிப்படை. இன்னும் இவ்வியக்கத் தின் வளர்ச்சிக்கேற்ப அருளப்பட்ட குர்ஆனின் சிறிய - பெரிய பகுதிகள் நூல் வடிவிலோ கட்டுரை வடிவிலோ கொடுக்கப் படவில்லை. மாறாக, உரைகளின் வடிவிலேயே அவை அருளப் பட்டன. மேலும் அந்த வடிவிலேதான் அவை பரப்பப்பட்டன. எனவேதான் அவற்றில் ஒரு கட்டுரையின் பாணி இருக்கவில்லை. மாறாக, ஓர் உரையின் தோரணையே அவற்றில் தென்பட்டது.

எனவே இந்த உரைகள் ஒரு பேராசிரியர் நிகழ்த்தும் சொற் பொழிவு போல் இல்லாமல் சீர்திருத்த அழைப்பு விடுப்போரின் பேருரைகளாய் இருந்தன; ஒரு சீர்திருத்த அழைப்பை விடுப்ப வருக்கோ தம்முடைய உரைகளின் மூலம் மக்களின் உள்ளங் களையும், சிந்தனைகளையும், உணர்ச்சிகளையும் வயப்படுத்த வேண்டியிருக்கிறது; விதவிதமான மனப்பாங்குடையவர்களைத் திருப்தியுறச் செய்ய வேண்டியுள்ளது. தம் இயக்கமும், பிரச் சாரமும் நடைமுறையில் செயல்படும்போது எண்ணற்ற மாறு பட்ட கட்டங்களையும், சூழ்நிலைகளையும் கடந்து செல்ல வேண்டியுள்ளது. சாத்தியமான எல்லா அம்சங்களைக் கொண்டும் தம்முடைய கருத்துகளை உள்ளங்களில் பதியவைத்து, பொது மக்களின் சிந்தனைகளையும், கருத்துகளையும் மாற்றியமைத்து

மக்களின் உணர்வுகளைத் தட்டியெழுப்ப வேண்டியதாகவு மிருக்கிறது; எதிர்ப்புகளின் வலிமையைத் தகர்த்தெறிய வேண்டி யிருக்கிறது.

தோழர்களைச் சீர்திருத்தி அவர்களுக்குப் பயிற்சியளிக்க வேண்டியதாயிருக்கிறது; தம் அழைப்பை நிராகரிப்போரை அவற்றை மனமுவந்து ஏற்றுக்கொள்ளும்படிச் செய்ய வேண்டிய தாயும் இருக்கிறது. எதிர்ப்பாளர்களின் வாதங்களை முறியடித்து, மக்களின் மீது அவர்களுக்குள்ள செல்வாக்கைப் பறிக்க வேண்டி யிருக்கிறது. சுருங்கக்கூறின், நன்னெறியின்பால் அழைப்பு விடுக் கும் முன்னணியாளர், ஒரு பேரியக்கத்தின் தலைவர் ஆற்ற வேண்டிய பணிகள் ஒவ்வொன்றையும் கவனிக்க வேண்டி யிருக்கிறது. எனவேதான் அல்லாஹுதஆலா தன் தூதருக்கு அருளிய பேருரைகள் ஓர் அழைப்புப் பணிக்கு ஏற்ற தோரணை யிலேயே அமைந்திருந்தன. எனவே ஒரு கல்லூரிப் பேராசிரியர் நிகழ்த்தும் சொற்பொழிவின் (Lecture) நடையை அதில் எதிர்பார்ப்பது சரியல்ல.

திருக்குர்ஆனில் ஒரே மாதிரியான விஷயங்கள் பலமுறை ஏன் திரும்பத் திரும்பக் கூறப்பட்டிருக்கின்றன என்பதும் மேற்கூறிய வற்றிலிருந்து நன்கு புலனாகும். ஓர் இயக்கம் செயல் ரீதியாக இயங்கிக் கொண்டிருக்கும் போது பல கட்டங்களைக் கடந்து செல்ல வேண்டியிருக்கிறது. ஒரு கட்டத்திலிருக்கும் போது அடுத்த கட்டத்தின் பிரச்னைகள் பற்றிச் சர்ச்சைகள் எழுப்பாமல், அந்த முதல் கட்டத்தின் பிரச்னைகள் பற்றியே பேசப்பட வேண்டு மென்று அத்தகைய இயக்கத்தின் சூழ்நிலைகள் இயல்பாகவே வேண்டுகின்றன. எனவே இந்த முதல் கட்டம் சில மாதங்கள் வரை இருந்தாலும் சரி, பல ஆண்டுகள் நீடித்தாலும் சரி, அதற் குரிய விஷயங்களைத்தான் மீண்டும் மீண்டும் கூற வேண்டி யுள்ளது. ஆனால் ஒரே வகையான செய்திகளை - ஒரே பாணியில் - ஒரே விதமான சொற்றொடர்களில் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டேயிருந்தால் உள்ளங்கள் சலிப்புற்றுச் சோர்வடைந்து விடும்.

இத்தகைய நிலையைத் தவிர்க்கவும், மிக இனிமையான முறையில் இயக்க அழைப்பை உள்ளங்களில் பதிய வைக்கவும், இயக்க அழைப்பின் இந்த முதல் கட்டத்தை உரமுடையதாகச் செய்யவும் பல தடவைகளில் திரும்பத் திரும்பச் சொல்லப்படும் பேச்சை ஒவ்வொரு தடவையும் புதிய நடையில், புதிய கோணத்தில், புதிய மெருகுடன் கூறவேண்டியிருக்கிறது. இன்னும் இந்த அழைப்பின் அடிப்படைகள் எந்த நிலையிலும், எவ்வேளையிலும் பார்வையிலிருந்து மறையாதிருக்கும் பொருட்டு இயக்கத்தின் ஆரம்பக்காலம் முதல் இறுதிக்கட்டம் வரை அதனுடைய கோட்பாடுகள், கருத்தோட்டங்கள், விதிமுறைகள் ஆகியவை பற்றி அடிக்கடி எடுத்துரைத்துக் கொண்டேயிருக்க வேண்டியுள்ளது. ஆகவேதான் இஸ்லாமிய இயக்கத்தில் ஒரு குறிப்பிட்ட கட்டத்தில்அருளப்பட்ட குர்ஆன் அத்தியாயங்களில் பொதுவாகவே ஒரே விதமான கருத்துகள் இருந்த போதிலும் சொற்கள், விளக்கும் முறை ஆகியவை விதவிதமாக மாறி மாறி வருகின்றன. ஆனால் ஏகத்துவம், அல்லாஹ்வின் குணநலன்கள், மறுமை, மறுமையில் மக்கள் விசாரிக்கப்படுதல், நற்கூலி, தண்டனை பெறுதல், ரிஸாலத் (இறைத்தூதுத்துவம்) இறைவேதங்கள் மீது நம்பிக்கை, இறையச்சம், பொறுமை, தவக்குல் (இறைவனை முற்றிலும் சார்ந்திருத்தல்) ஆகியவை பற்றியும் இன்னும் இவை போன்ற அடிப்படைக் கருத்துகளும் திருக்குர்ஆன் முழுவதிலும் திரும்பத் திரும்பக் கூறப்பட்டிருப்பதை நாம் காண்கிறோம்.

இயக்கத்தின் எந்த ஒரு கட்டத்திலும் இந்த அடிப்படைகள் குறித்து அசட்டையாகவோ - கவனக்குறைவாகவோ இருத்தலாகாது. எனவேதான் பல்வேறு கட்டங்களுக்குரிய விஷயங்களைத் தெளிவுபடுத்திக் கொண்டிருக்கும்போது இந்த அடிப்படைகள் அடிக்கடி நினைவூட்டப்படுகின்றன. இவ்வாறில்லாமல் இந்த அடிப்படைக் கருத்தோட்டங்கள் சிறிது பலவீனப்பட்டாலுங்கூட இஸ்லாத்தின் இந்த இயக்கம் உயிரோட்டத்துடனும், துடிதுடிப்புடனும் ஓர் அடிகூட முன் எடுத்து வைக்க முடியாது.

## தொகுப்பு முறை

குர்ஆன் எந்த வரிசையில் அருளப்பட்டதோ அதே வரிசையில் நபி (ஸல்) அவர்கள் அதனை ஏன் தொகுக்கவில்லை எனும் கேள்விக்கும் மேற்கூறிய விளக்கத்தைச் சிந்தித்துப் பார்த்தால் விடை கிடைத்துவிடும். இருபத்து மூன்றாண்டுகள் - இந்த அழைப்பின் தொடக்கத்திலிருந்து அதன் நிறைவு வரை அதன் வளர்ச்சிக்கேற்பத் திருக்குர்ஆன் அருளப்பட்டது என்பது முன்னர் கூறியவற்றிலிருந்து உங்களுக்கு விளங்கியிருக்கும். இயக்க வளர்ச்சிக்கு இசைவான வரிசையில் அருளப்பட்ட குர்ஆனின் பகுதிகளை - அந்த இயக்கம் நிறைவு பெற்ற பின்னும் அதே வரிசைக் கிரமத்தில் அமைப்பது பொருத்தமாயிராது என்பது வெளிப்படை. அழைப்பு நிறைவு பெற்ற பின்னர் உருவான புதிய சூழ்நிலைக்குப் பொருத்தமாய் ஒரு நிரந்தரத் தொகுப்பு முறைதான் இப்போது தேவைப்பட்டது. ஏனென்றால் தொடக்கத்தில் திருக்குர்ஆன் யாரை நோக்கி உரை நிகழ்த்தியதோ அவர்கள் இஸ்லாத்தைப் பற்றி சிறிதும் அறியாதவர்கள். எனவே அந்நேரத்தில் அடிப்படையிலிருந்து அவர்களுக்குரிய அறிவுரைகள் துவங்கின.

ஆனால் இந்த அழைப்பு நிறைவு பெற்றதும் அதே மக்கள் அதை ஏற்றுச் செயற்படுத்தும் ஒரு குழுவாக (உம்மத்தாக) அமைந்துவிட்டனர். நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் கொள்கை ரீதியிலும், செயல்ரீதியிலும் எந்தப் பொறுப்பினை முழுமைப்படுத்தி அவர்களிடம் ஒப்படைத்திருந்தார்களோ அதனைத் தொடர்ச்சியாகச் செயலாற்றிக் கொண்டிருக்கும் கடமை அம்மக்கள் மீது சார்ந்திருந்தது. எனவே, தம்முடைய கடமைகள், வாழ்க்கை நியதிகள் ஆகியவை பற்றியும் முந்திய நபிமார்களைப் பின்பற்றியவர்களுக்கு மத்தியில் தோன்றிய பிணிகள், பூசல்கள் ஆகியவை பற்றியும் இக்குழுவினர் நன்கு தெரிந்து கொள்வது முதன்மையும், முக்கியத்துவமும் பெற்றதாகி விட்டது.

இவற்றை அறிந்துகொண்ட பின், உலக மக்களுக்கு இஸ்லாத்தின்பால் அழைப்பு விடுத்து அதன் வழியில் அனைவரையும் நடத்திச் செல்லும் பொறுப்பு அவர்களைச் சார்ந்திருந்தது. ஆகவே குர்ஆன் அருளப்பட்ட வரிசை முறை இப்போது பொருந்தாது என்பது வெளிப்படை!

திருக்குர்ஆன் எத்தகைய நூல் என்பதை ஒருவர் நன்கறிந்து கொண்டால், ஒரே விஷயத்தைப் பற்றிப் பேசும் பல பேருரைகளையும் ஒரே இடத்தில் திரட்டி வைப்பது இதன் தன்மைக்கு ஒவ்வாது என்பது அவருக்குத் தானே புலனாகிவிடும். இஸ்லாத்தைப்பற்றி ஒருதலைப்பட்சமான (Onesided) கருத்து ஏற்படுவதைத் தவிர்க்கவும், அதனுடைய ஒருங்கிணைந்த முழுமையான காட்சியைத் தன் வாசகர்கள் முன் வைக்கும் பொருட்டும், மதீனாவில் அருளப்பட்டவற்றை - மக்காவில் அருள் செய்யப்பட்ட அறிவுரைகளுக்கிடையேயும், மக்காவில் தரப்பட்ட அறிவுரைகளை - மதீனாவில் அருளப்பட்டவற்றுக்கு மத்தியிலேயும், ஆரம்பகாலத்திருவசனங்கள், இறுதிக்கட்டத்தின் அறிவுரைகளோடு திரும்பத் திரும்ப வரும் வகையிலும் திருமறையைத் தொகுக்கும் முறையே இசைவாயிருந்தது.

இன்னும் திருக்குர்ஆனை - அதனை அருளப்பட்ட வரிசைக் கிரமத்திலேயே தொகுத்திருந்தால், அது பிற்கால மக்களுக்கு எளிதில் புரியக்கூடியதாய் இருந்திருக்காது. குர்ஆன் அருளப்பட்ட வரலாற்றின் முழு விவரத்தையும், அதன் பல்வேறு பகுதிகள் இறங்கிய காலத்தில் நிலவியிருந்த சூழ்நிலைகளையும், பின்னணியையும், அது அருளப்பட்ட மாண்பினையும் மிகவும் விவரமாக எழுதி குர்ஆனுடன் இணைத்திருந்தால்தான் மேற்சொன்ன வரிசை பிற்கால மக்களுக்கு எளிதில் புரியக்கூடியதாயிருக்கும்.

மேலும் அத்தகைய ஏற்பாடு குர்ஆனின் பிற்சேர்க்கையாகவும் இருந்திருக்கும். ஆனால் இதுவோ தன் வாக்கை ஒரு பாதுகாப்பான தொகுப்பாக அமைக்க வேண்டும் எனும் அல்லாஹ்வின்

நோக்கத்திற்கு முற்றிலும் முரணாக இருந்திருக்கும். வேறு எந்தச் சொல்லின் கலப்பினாலும், இணைப்பினாலும் தன் தூய்மையை இழக்காத வகையில் அதன் முழுப் பொலிவுடன் அமைந்த தொகுப்பாக குர்ஆன் இருக்க வேண்டுமென்பதும் - அதனைக் குழந்தைகள், இளைஞர்கள், முதியவர்கள், பெண்கள், ஆண்கள், நகரவாசிகள், கிராமவாசிகள் ஆகிய அனைவரும் சுவைத்துப் படிக்கும் வகையில் அமைந்திருக்க வேண்டும் என்பதும் - மேலும் ஒவ்வொரு நிலையிலும் ஒவ்வொருவரும் படித்து இறைவன் தம்மிடம் எதை வேண்டுகிறான் ; எதை வேண்ட வில்லை என்று தெளிவாக அறிந்து கொள்ள வேண்டும் என்பதும் தான் அதன் முக்கிய நோக்கமாக இருந்தது. எனவே இறைவாக்கு டன் ஒரு நெடிய வரலாற்றையும் எழுதி வைத்து, அதனைத் 'திலாவத்' செய்வதும் - ஓதுவதும் கடமையாக்கப்பட்டுவிட்டால் மேலே கூறிய முக்கிய நோக்கம் தவறிவிடும் என்பது வெளிப் படை!

குர்ஆனின் வரிசை அமைப்பைப் பற்றி ஆட்சேபணை செய்வோர் உண்மையில் இத்திருமறையின் இலக்கையும், நோக்கையும், உள்ளக்கிடக்கையையும் உணராதவர் ஆவர். அதுமட்டுமல்ல, அவர்கள் இத்திருவேதம் - வரலாற்றையும், தத்துவத்தையும் கற்கும் மாணவர்களுக்காகவே அருளப்பட்டது எனும் தவறான எண்ணங்களில் உழல்வோரேயாவர்.

## அருளியவனே தொகுத்தவன்

திருக்குர்ஆனின் தொகுப்பு குறித்து மேலும் ஒரு விஷயத்தை வாசகர்கள் தெரிந்திருக்க வேண்டும். அதாவது, அதனுடைய இந்த அமைப்பு பிற்கால மக்களால் ஏற்படுத்தப்பட்டதல்ல; மாறாக இறைவனின் வழிகாட்டுதலுக்கேற்ப நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் இந்த அமைப்பில் தொகுக்கச் செய்தார்கள். இதற்காகக் கடைப்பிடிக்கப்பட்ட முறையாவது: குர்ஆனில் ஓர் அத்தியாயம் அருளப்பட்டால், நபி பெருமானார் (ஸல்) அவர்கள் உடனடியாக

காதிப் (எழுதுபவர்) ஒருவரை அழைத்து, அதனை முழுக்க முழுக்கச் சரியாக எழுதும்படிச் செய்து அதை ஒரு குறிப்பிட்ட அத்தியாயத்துக்கு முந்தியும், ஒரு குறிப்பிட்ட அத்தியாயத்துக்குப் பிந்தியும் இடம்பெறச் செய்யுமாறு கூறுவார்கள். இதுபோலவே முழு அத்தியாயமும் அருளப்படாமல், ஒரு பகுதியே அருளப் பட்டால் குறிப்பிட்ட எந்த அத்தியாயத்தில் எந்த இடத்தில் அது அமைய வேண்டும் என்பதையும் கூறி விடுவார்கள். பின்னர், அதே வரிசையிலேயே பெருமானார் (ஸல்) அவர்கள் தொழுகை யிலும், இதர நேரங்களிலும் குர்ஆனை ஓதி வந்தார்கள். மேலும் அதே வரிசைப்படியே பெருமானார் (ஸல்) அவர்களின் தோழர் களும் அதனை மனனம் செய்து வந்தனர்.

எனவே குர்ஆனின் இறுதிப் பகுதி, என்றைக்கு அருளப்பட்டு நிறைவு பெற்றதோ அக்கணமே குர்ஆனுடைய (இன்றைய) அமைப்பின் தொகுப்புப் பணியும் நிறைவு பெற்றுவிட்டது என்பது ஆதாரப்பூர்வமான வரலாற்று உண்மையாகும். ஆகவே தான், குர்ஆனை அருளிய இறைவனே அதன்தொகுப்பாளனா வான்; மேலும் எந்த நபியவர்களின் புனித உள்ளத்தில் அது இறக்கி வைக்கப்பட்டதோ அவர்களுடைய புனிதக் கரங்களா லேயே அதைத் தொகுக்கவும் செய்தான். அதில் எவரும் தலையிட உரிமையும் தகுதியும் பெற்றிருக்கவில்லை.

## முற்றிலும் பாதுகாக்கப்பட்ட ஒப்பற்ற மறை

ஆரம்பத்திலிருந்தே தொழுகை* முஸ்லிம்கள் மீது கடமை யாகிவிட்டதாலும், குர்ஆனை ஓதுவது தொழுகையின் ஒரு

* ஐந்து வேளைத் தொழுகை பெருமானார் (ஸல்) அவர்கள் நபித்துவம் பெற்ற சில ஆண்டுகளுக்குப் பின்னர்தான் கடமையாக்கப் பட்டது என்றாலும், தொழ வேண்டுமென்பது ஆதி நாளிலிருந்தே விதியாக்கப்பட்டு விட்டது. இஸ்லாத்தில் என்றுமே தொழுகை பர்லாக்கப்படாமலிருந்ததில்லை என்பது வெளிப்படை.

கட்டாய அம்சமாகி விட்டதாலும், குர்ஆன் அருளப்பட ஆரம்பித்ததும் அதை மனப்பாடம் செய்யும் மரபையும் முஸ்லிம்கள் மேற்கொண்டனர். குர்ஆனின் திருவசனங்கள் - அருளப்பட அருளப்பட முஸ்லிம்கள் அவற்றை மனனம் செய்துகொண்டே வந்தனர். எனவே அல்-குர்ஆன் பாதுகாக்கப்பட்ட நிலையில் இருப்பதற்கு இரண்டு முக்கிய காரணங்கள் இருக்கின்றன. ஒன்று: அது அருளப்பட்டதும் நபிபெருமானார் (ஸல்) அவர்கள், எழுதத் தெரிந்த தோழர்களைக் கொண்டு அதனை ஈச்ச இலைகளிலும், எலும்புத்துண்டுகளிலும், மரப்பட்டைகளிலும் எழுதச் செய்தார்கள். இரண்டு : குர்ஆன் அருளப்பட்டதும் பத்து, இருபது பேர் மட்டுமல்ல; நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான ஏன், இலட்சக் கணக்கான மக்கள் தம் இதயங்களில் அதனைப் பதிய வைத்துக் கொண்டனர். அத்திருவசனங்களை இதயத்தில் செதுக்கி வைத்ததுபோல் மனப்பாடம் பண்ணிக் கொண்டனர். எந்த விஷமியும் எள்ளளவும் இதில் மாற்றம் செய்யவோ, அழிக்கவோ இயலாத வகையில் திருக்குர்ஆன் முழுக்க முழுக்கப் பாதுகாக்கப் பட்டது.

நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் இப்பூவுலகைவிட்டுப் பிரிந்த பின்னர் 'இர்த்திதாத்' - கொள்கை மாறுபாட்டில் இறங்கி மார்க்கத்தை மீறும் விஷயம் தலை தூக்கிற்று. இதனைத் தடுத்து நிறுத்தும் பணியில் அண்ணலாரின் தோழர்கள் கடினமான போர்கள் புரிய வேண்டியதாயிற்று. பெருமானாரின் அன்புத் தோழர்களாக இருந்த 'ஹாஃபிள்கள்' (குர்ஆனை மனனம் செய்தவர்கள்) பலர் ஷஹீதாகிவிட்டனர். இந்த நிலையைக் கண்ட உமர் (ரலி) அவர்கள் குர்ஆனின் பாதுகாப்பு குறித்துப் பெரிதும் கவலை கொண்டார்கள். குர்ஆன் பாதுகாப்பாயிருப்பதற்கு அதனை மனனம் செய்யும் ஒரே வழியை நம்பியிருப்பது மட்டும் சரியல்ல; அதனைச் சரிவர சுவடிகளிலும் பாதுகாப்பாகப் பதித்து வைப்பதற்கு ஒழுங்கான ஏற்பாடுகள் செய்தாக வேண்டும் எனும் எண்ணமும் அவர்களுக்கு உண்டாயிற்று. இதன் முக்கியத்துவத்தை அவர்கள் அபூபக்ர் ஸித்தீக் (ரலி) அவர்களுக்கு விளக்கி

னார்கள். இப்பிரச்னையில் அபூபக்ர் (ரலி) சற்றுத் தயங்கினார்கள். ஆனால் அதன் பல அம்சங்களையும் நல்ல முறையில் சிந்தித்த பிறகு உமர் (ரலி) அவர்களின் திட்டத்தை அவர்கள் ஏற்றுக் கொண்டுவிட்டார்கள். இப்பணிக்காக, நபிகள் பெருமானாரின் உதவியாளராக செயலாற்றி வந்த ஜைத்பின் ஃதாபித் அன்ஸாரி (ரலி) அவர்களை நியமித்தார்கள். இதற்கு விதிமுறைகளும் வகுக்கப்பட்டன. முதலாவதாக, நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் விட்டுச் சென்றிருந்த சுவடிகளையெல்லாம் ஒன்று சேர்க்க வேண்டும். இரண்டாவதாக, கண்ணியம் வாய்ந்த ஸஹாபி (அண்ணலாரின் தோழர்)களிடம் முழுமையாகவோ, பகுதி யாகவோ,★ எழுதப்பட்டிருந்த குர்ஆனின் சுவடிகளும் திரட்டப்பட வேண்டும். பின்னர் திருக்குர்ஆனை மனப்பாடம் செய்திருந்த ஹாஃபிள்களிடமிருந்தும் உதவி பெறவேண்டும். இம்மூன்று வகைகளில் ஒருங்கிணைந்த சான்றுகளை ஆய்ந்து குர்ஆனின் வசனங்கள், அதன் ஒவ்வொரு வார்த்தையின் அமைப்புமுறை ஆகியன முழுக்க முழுக்கச் சரியாக இருக்கின்றன எனும் தெளிவும், திருப்தியும் பெற்றபின் ஆதாரப்பூர்வமாகக் குர்ஆனுடைய ஒவ்வொரு வார்த்தையும் பதிவு செய்து வைக்கப் பட்டது. இந்த அடிப்படையில் குர்ஆன் ஷரீஃபின் ஒரு பிரதி தொகுக்கப்பட்டு, உம்முல் முஃமினீன் ஹஃப்ஸா (ரலி) அவர் களின் வீட்டில் வைக்கப்பட்டது. மக்களனைவரும் இந்த ஆதாரப் பூர்வமான தொகுப்பிலிருந்து குர்ஆனை நகல் எடுத்துக்கொள்ள

★ ஆதாரமான அறிவிப்புகளிலிருந்து, நபி பெருமானார் (ஸல்) அவர் களின் வாழ்நாளிலேயே ஸஹாபாக்களில் சிலர் குர்ஆன் முழுவதையுமோ அதன் பகுதிகளையோ எழுதி வைத்திருந்தார்கள் என்றும்; அவர்களில் உஸ்மான், அலீ, அப்துல்லாஹ் இப்னுமஸ்ஊது, அப்துல்லாஹ் இப்னு அம்ருப்னுல் ஆஸ், ஸாலிம் மௌலா ஹுதைஃபா, ஜைத்பின் ஃதாபித், முஆத்பின் ஜபல், உபை பின் கஅப், அபூஜைத் கைஸ்பின் ஸகன் (ரலி-அன்ஹும்) ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள் என்றும் தெரியவருகிறது.

வேண்டும் அல்லது தங்களிடம் உள்ள சுவடிகளை இதனோடு ஒப்புநோக்கிக் கொள்ள வேண்டுமென்று பொது அறிவிப்பும் விடுக்கப்பட்டது.

நம் நாட்டில் உர்து, பஞ்சாபி, வங்காளி மற்றும் பல மொழிகள் பேசப்படுகின்றன. ஆனால் அவை ஒவ்வொன்றும் நகரத்துக்கு நகரம் மாவட்டத்திற்கு மாவட்டம் பேச்சு வழக்கில் மாறுபட்டிருப்பதை நாம் காண்கிறோம். இதுபோலவே அரபுநாடு முழுவதும் அரபி மொழி பேசப்பட்டு வந்தபோதிலும், அதன் பல குலங்களிலும் - பல பகுதிகளிலும் பேச்சு வழக்கு மாறுபட்டிருந்தது. திருக்குர்ஆன் மக்கா நகரில் குறைஷிகள் கையாண்ட அரபியில்தான் அருளப்பட்டது. ஆனால், பல்வேறு திசையைச் சார்ந்தவர்களும், பல்வேறு குலத்தாரும் சிரமமின்றி இதனை ஓத உதவும் பொருட்டு அவரவர் பாணியில் திருமறையை ஓதலாம் என்று அனுமதிக்கப்பட்டிருந்தார்கள்.

இவ்வாறு படிப்பதினால் குர்ஆனுடைய வாக்கிலும், பொருளிலும் எந்தவித மாறுதலும் ஏற்படுவதில்லை. ஆனால் இஸ்லாம் பரவப் பரவ, அரபு மக்கள் தங்கள் பாலைப்பெரு வெளிகளிலிருந்து கிளம்பி, அன்றைய உலகில் பெரும் பகுதியை வெற்றி கொள்ளவும், அங்கு பிற இன, சமுதாய மக்கள் இஸ்லாமிய அணியில் சேரவுமான நிலை ஏற்பட்டதும், அரபியர் - அரபியரல்லாத மக்களிடையே பெரிய அளவில் உறவும் தொடர்புகளும் உண்டாயின. இதன் காரணமாக அரபி மொழியிலும் பாதிப்புகள் ஏற்பட்டன. எனவே ஆங்காங்கேயுள்ள வட்டார மொழிகளின்படி திருக்குர்ஆன் ஓதுவது மேலும் அனுமதிக்கப்பட்டு வந்தால், அதனால் விதவிதமான குழப்பங்களும், சர்ச்சைகளும் தலைதூக்கும் எனும் அச்சம் எழுந்தது.

உதாரணமாக, ஒருவர் தம்முடைய வட்டாரப் பாணியில் திருக்குர்ஆனை ஓதிக்கொண்டிருக்கிறார் என்று வைத்துக்

கொள்வோம். இந்தப் பாணியைக் கேட்டிராத மற்றொருவர் இதைச் செவியேற்கும்போது முந்தியவர் குர்ஆனில் வேண்டு மென்றே தஹ்ரீஃப் (வாசக மாற்றம்) செய்கிறார் எனும் தவறான எண்ணத்தில் சிக்கி விடுவார். அதனால் பல பிணக்குகள் தோன்றக் கூடும். அல்லது அரபுகள் - அரபு அல்லாதாருடைய உறவினால் யாருடைய மொழி பாதிக்கப்பட்டதோ அந்தப் பாதிக்கப்பட்ட மொழிக்கு ஏற்ப, குர்ஆனை ஓத முற்படும்போது அதனுடைய அழகும் இனிமையும் பாதிக்கப்படக் கூடுமெனும் அச்சமும் ஏற்பட்டது. இக்காரணங்களினால் உஸ்மான் (ரலி) அவர்கள் ஸஹாபிகளுடன் கலந்தாலோசித்து, இஸ்லாமிய ஆட்சியிலுள்ள எல்லா நாடுகளிலும், அபூபக்ர் ஸித்தீக் (ரலி) அவர்களின் ஆணை யால் ஒன்றுசேர்க்கப்பட்ட மூலத்தின்படிதான் பிரதிகள் எழுதப் பட வேண்டும்; வேறு வகைகளிலும், வட்டார வழக்குகளுக் கொப்பவும் நடப்பிலிருந்த எல்லாப் பிரதிகளையும் தடை செய்ய வேண்டும் என்று முடிவு கட்டினார்கள்.

## அப்பழுக்கற்ற தூய இறைமறை

இன்று நம்முடைய கரங்களிலே இருக்கும் திருக்குர்ஆனின் பிரதிகள் அபூபக்ர் (ரலி) அவர்களின் பிரதிக்கொப்ப உஸ்மான் (ரலி) அவர்கள் இஸ்லாமிய உலகின் பல பகுதிகளுக்கும் அன்று அனுப்பிய பிரதிகளுக்கு முற்றிலும் சரியான நகலேயாகும். இன்றும்கூட உலகின் பல்வேறு பகுதிகளில் உஸ்மான் (ரலி) அவர்கள் அனுப்பி வைத்த பிரதிகள்தாம் இருக்கின்றன. திருக்குர் ஆன் அன்றிலிருந்து இன்றுவரை எந்த மாற்றமும் இல்லாமல் இருக்கின்றது என்பதைச் சோதிக்க வேண்டுமானால் ஒருவர் மேற்கு ஆஃப்ரிக்காவின் ஏதாவது ஒரு புத்தகக் கடையில் திருக்குர்ஆனின் பிரதி ஒன்றை வாங்கிக் கொள்ளட்டும்; அதை எடுத்துக்கொண்டு ஜாவா நாட்டுக்கு வந்து, அங்கிருக்கும் குர்ஆனை மனனம் செய்த (ஹாஃபிள்) ஒருவரிடம் குர்ஆன்

முழுமையையும் ஓதக்கேட்டுத் தம் கையிலிருக்கும் பிரதியுடன் ஒப்புநோக்கிப் பார்க்கட்டும்! இரண்டும் எழுத்து மாறாமல் சரியாக இருப்பதை அவர் உறுதியாகக் கண்டு கொள்வார். அதன்பின் உலகின் மிகப் பெரிய நூல்நிலையங்களில் - உஸ்மான் (ரலி) அவர்கள் காலத்திலிருந்து இன்றுவரை பல்வேறு நூற்றாண்டுகளில் - பல்வேறு கரங்களால் நகல் செய்யப்பட்ட குர்ஆனின் பிரதிகள் எத்தனை உண்டோ அவை அனைத்தையும் தம் கையிலிருக்கும் பிரதியோடு ஒப்பிட்டுப் பார்க்கட்டும்! இதில் ஏதாவது வேற்றுமை காண முடியுமானால் தம் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த மகத்தான கண்டுபிடிப்பை உலகம் முழுமைக்கும் எடுத்துரைக்கட்டும்!

எத்தகைய தெளிவான விஷயங்களிலும் சந்தேகிப்பவர் உண்டு. அவர்கள் திருக்குர்ஆன் அல்லாஹ்வுடைய வாக்குத்தானா என்ற சந்தேகத்தில் உழலலாம்; ஆனால் நம் கையில் இன்று இருக்கும் குர்ஆனின் பிரதி உலகத்தின் முன் - முஹம்மத் (ஸல்) அவர்கள் சமர்ப்பித்த குர்ஆனுக்கு முழுக்க முழுக்கச் சரியாக இருக்கிறது. அதில் எந்த விதத்திலும் கூடுதலும் குறைவும் இல்லை எனும் விஷயத்தில் சந்தேகம் கொள்ள முடியாது. இது வரலாற்று ஆதாரமுடைய பேருண்மையாகும். இதுபற்றி எள்ளள வும் சந்தேகப்படுவதற்கு இடமில்லை. மனித வரலாற்றில் இவ்வளவு ஆதாரப்பூர்வமானதை வேறெங்கும் காணமுடியாது.

இத்தனை உறுதிப்பாடுகளுக்குப் பிறகும் ஒருவர் இதுபற்றிச் சந்தேகப்படுவாராயின், அவர் 'ரோமப் பேரரசு என ஒன்று உலகிலே ஆட்சி செலுத்திற்றா? முகலாய மன்னர்கள் இந்தி யாவை ஆண்டார்களா? நெப்போலியன் எனும் ஒருவர் இருந்தா ரா?' - என்றெல்லாம் ஐயப்படக்கூடும். இத்தகைய வரலாற்று ஆதாரமுடைய உண்மைகளைப் பற்றிச் சந்தேகங்கொள்வது அறிவையும், ஞானத்தையும் அடிப்படையாகக் கொண்டதல்ல; மாறாக, அது அவருடைய அறியாமையை அடிப்படையாகக் கொண்டதே ஆகும்.

## திருக்குர்ஆன் ஆய்வுமுறை

உலகில் எண்ணற்ற மனிதர்கள் - எண்ணற்ற நோக்கங்களைக் கொண்டும் கருத்துகளைக் கொண்டும், குர்ஆனை அணுகுகிறார்கள். எனவே இவர்கள் அனைவருடைய தேவைகளையும், நோக்கங்களையும் முன் வைத்து அதைப் பற்றி ஆலோசனை கூறுவது சாத்தியமானதல்ல. குர்ஆனை ஆய்ந்து படிக்கும் முறைகள் பற்றிச் சில ஆலோசனைகள் கூற விரும்புகிறேன். அத்தகைய ஆய்வில் பொதுவாக ஏற்படும் சில சிக்கல்களுக்கு தீர்வுகாணும் முறை பற்றியும் சில விளக்கங்கள் தர விரும்புகிறேன்.

இந்தத் திருமறையை உண்மையிலேயே நன்கறிந்து கொள்ள வேண்டுமெனும் ஆர்வமுள்ளவர்கள் - அதன் மீது அவர்களுக்கு நம்பிக்கை இருந்தாலும் சரி ; இல்லாவிட்டாலும் சரி - முதன் முதலில் ஏற்கனவே தம் உள்ளங்களில் நிலைப்பெற்றுவிட்ட இந்நூலைப்பற்றிய கருத்துகளையும் எண்ணங்களையும் விருப்பு-வெறுப்புகளையும் இயன்ற அளவு அகற்றிவிட வேண்டும்; பிறகு இதைப் புரிந்து கொள்ள வேண்டுமெனும் ஒரே நோக்கத்தோடு, திறந்த மனதோடு இதனைப் படிக்கத் துவங்க வேண்டும். அவ்வாறில்லாமல் இந்நூலைப்பற்றி ஏற்கனவே சில கருத்துகளை உள்ளத்தில் புகுத்திக் கொண்டு இதனைப் படிக்க முற்படுவோர் குர்ஆனின் வரிகளுக்கிடையே தம் கருத்துகளையே படித்துக் கொண்டு போகிறார்களே யொழிய குர்ஆனின் கருத்துகளை அவர்கள் அறிந்து கொள்வதில்லை! பொதுவாக எந்த ஒரு நூலையும் இவ்வாறு படிப்பது சரியான வழியாகாது. அதிலும் குறிப்பாக திருக்குர்ஆனைப் பொறுத்தமட்டில் இம்முறை சிறிதும் பயன்தராது. இவ்வாறு படிப்பவருக்கு குர்ஆன் தன் கருத்துகளைப் புரிந்து கொள்ள வாய்ப்பளிப்பதேயில்லை!

திருக்குர்ஆனின் உள்ளடக்கத்தைப் பற்றி மேலோட்டமாகத் தெரிந்துகொள்ள வேண்டுமென விரும்புவோர்க்கு அதனை ஒருமுறை படித்தாலே போதுமானது. ஆனால் திருமறையின்

ஆழ்ந்த பொருள்களை உணர விரும்புவோர்க்கு ஐந்து அல்லது ஆறு முறை அதனைப் படிப்பது கூடப் போதுமானதாகாது. மாறாக, அவர்கள் அதனைத் திரும்பத் திரும்பப் படிக்க வேண்டும்; அதிலும் ஒவ்வொரு தடவையும் அதனை ஒரு புதுக் கோணத்திலிருந்து நோக்க வேண்டும். ஒரு மாணவனைப்போல் பேனாவையும், தாளையும் வைத்துக்கொண்டு ஆங்காங்கே அவசியமான இடங்களில் குறிப்புகளை எழுதி வைத்துக்கொள்ள வேண்டும். இவ்வாறாகப் படிக்க விரும்புவோர், சிந்தனை - செயல் ஆகிய இரு கூறுகளையும் பற்றி இத்திருமறை வகுத்துத் தந்துள்ள அமைப்பை ஒரே கண்ணோட்டத்தில் முழுமையாக அறிந்து கொள்ளும் பொருட்டுக் குறைந்தபட்சம் இருமுறை யாவது திருமறையைப் படிக்க வேண்டும்.

இவ்வாறு ஆரம்பத்தில் படிக்கத் துவங்கும்போது திருக்குர் ஆன் காட்டிடும் பல்வேறு பகுதிகள் மீது ஒட்டுமொத்தமாக ஒரு பார்வையைச் செலுத்த வேண்டும். மேலும் இத்திருமறை எந்த அடிப்படைக் கருத்தோட்டங்களை எடுத்துரைக்கிறது; அந்த அடிப்படைகளின் மீது எத்தகைய வாழ்க்கை அமைப்பை நிர்மாணிக்க வலியுறுத்துகிறது எனக் கவனித்துக்கொண்டே போக வேண்டும். இப்படிக் கவனிக்கும்போது எந்த இடத்திலாவது சந்தேகமோ, கேள்வியோ எழுமானால் அவை பற்றி உடனே முடிவு கட்டிவிடாமல், அவற்றைக் குறித்து வைத்துக் கொண்டு மேலே தொடர்ந்து படித்துணர முற்பட வேண்டும். இந்த முறையைக் கையாண்டால், அத்தகைய வினாக்களுக்குப் பின்வரும் பகுதிகளில் விடை கிடைத்துவிடும். சந்தேகங்களுக் கும் விடை கிடைத்துவிடும்.

அப்படி விடை கிடைத்ததும் தாம் குறித்து வைத்திருந்த வினாக்களுடன் இந்தப் பதிலையும் இணைத்து எழுதி வைத்துக் கொள்ள வேண்டும். ஆனால் முதல் தடவை இதனைப் படிக்கும் போது, ஏதேனும் கேள்விக்கு விடை கிடைக்கவில்லையென் றால், பொறுமையுடன் மீண்டும் ஒரு தடவை ஆராய வேண்டும்.

என்னுடைய சொந்த அனுபவத்தைக் கொண்டு கூறுகிறேன். இப்படி இரண்டாவது தடவை பார்வையிடும் போது, பெரும் பாலும் எந்தக் கேள்விக்கும் விடை கிடைக்காமல் போவதில்லை.

இப்படித் திருக்குர்ஆன் மீது ஒருங்கிணைந்த கண்ணோட்டம் செலுத்திய பிறகு, விரிவாக ஆய்வைத் துவங்க வேண்டும். இப்போது குர்ஆனை ஆய்ந்து பார்ப்பவர் அதனுடைய அறிவுரை களின் ஒவ்வோர் அம்சத்தையும் சிந்தையிலிருத்தி வைத்துக் கொள்வதோடு எழுதியும் வைத்துக் கொள்ள வேண்டும். உதாரண மாக, எத்தகைய பண்புகளைக் குர்ஆன் விரும்புகிறது, எத்தகைய தன்மைகளை அது வெறுக்கிறது என்பதை ஒருவர் நன்றாகப் புரிந்துகொள்ள விரும்பினால் அவர் தம்முடைய நோட்டுப் புத்தகத்தில் இரண்டு பத்திகள் போட்டுக்கொண்டு. ''விரும்பத் தக்க பண்புகள்'' என்று முதல் பத்தியின் தலைப்பிலும், ''வெறுக் கத்தக்க தீயகுணங்கள்'' என்று இரண்டாம் பத்தியின் தலைப் பிலும் எழுதிக்கொள்ள வேண்டும். பிறகு குர்ஆனில் எங்கெங்கு இவை பற்றிக் கூறப்பட்டிருக்கிறதோ அவற்றை அதனதன் பத்திகளில் குறித்துக் கொள்ள வேண்டும்.

பிறிதோர் உதாரணம்: குர்ஆனின் நோக்கில் மனிதனுக்கு வெற்றியும் மீட்சியும் தருவது எதைப் பொறுத்திருக்கிறது ; எவை மனிதனுக்குக் கேட்டையும், இழப்பையும், அழிவையும் தருபவை என்பனவற்றை விரிவாகவும் தெளிவாகவும் தெரிந்து கொள்ள விரும்புவோர் கடைப்பிடிக்கச் சரியான வழி : குர்ஆனை ஓதுகையில் தம் நோட்டுப் புத்தகத்தில் வெற்றியும், ஈடேற்றமும் தருபவை யாவை என்று எதிரெதிரே எழுதிக் கொள்ளுதல்; பின்னர் திருக்குர்ஆனைப் படிக்கும் போது அன்றாடம் இந்த இரண்டு தலைப்புகளைப் பற்றியும் கூறப்பட்டிருப்பதை குறித்துக் கொண்டே போதல் ஆகும். இந்த முறையிலேயே கொள்கை - கோட்பாடுகள், உரிமைகள், கடமைகள், பண்பாடு, ஒழுக்க வியல், அரசியல், சட்டங்கள், இயக்கக் கட்டுப்பாடு, போர்,

சமாதானம் இன்னும் இதர வாழ்க்கைப் பிரச்னைகள் பற்றி ஒருவர் குர்ஆனின் அறிவுரையைத் தெளிவாக அறிந்து கொள்ள விரும்பு வாராயின், அவற்றில் ஒவ்வொன்றையும் தனித் தனித் தலைப்பு களாக எழுதிக்கொள்ள வேண்டும்.

பிறகு குர்ஆனிலிருந்து இந்தத் தலைப்புகள் பற்றிக் கூறப்பட்டிருக்கும் கருத்துகளை அதற்குரிய பக்கங்களில் குறித்துக் கொள்ள வேண்டும். மேலும் இவ்வாறு தொகுக்கப்பட்டதி லிருந்து வாழ்வின் ஒவ்வொரு துறையும் எந்த வடிவத்தில் அமைகிறது என்று பார்க்க வேண்டும். பிறகு இந்த வடிவங்கள் அனைத்தும் ஒன்று சேர்வதால் முழு வாழ்க்கை அமைப்பு எந்தத் தோற்றத்தில் அமைகிறது என்பதைச் சிந்திக்க வேண்டும்.

பின்னர், குறிப்பிட்ட ஒரு வாழ்க்கைப் பிரச்னை பற்றிய குர்ஆனின் கண்ணோட்டம் என்னவென்று ஆழ்ந்து ஆராய விரும்பினால், அதற்குரிய சிறந்த வழி : முதலில் இந்தக் குறிப் பிட்ட பிரச்னை பற்றி பண்டைய, தற்கால நூல்கள், இலக்கியங் கள் என்ன கூறுகின்றன என ஆய்ந்தறிந்து கொள்ளுதல், பிரச்னை யிலுள்ள அடிப்படைத் தன்மைகள் யாவை, அவற்றைப் பற்றி இதுவரை மனிதன் எவ்வாறெல்லாம் சிந்தித்திருக்கிறான்; என்ன வெல்லாம் புரிந்து கொண்டிருக்கிறான்; மேலும் இப்பிரச்னை யின் எந்தத் தன்மைகள் தீர்வு காணப்படாமல் இருக்கின்றன ; மனிதனின் அறிவும் சிந்தனையும் எந்த இடத்தில் பிரமித்து நின்று விட்டிருக்கின்றன என்பனவற்றையெல்லாம் தெளிவாக விளங் கிக் கொள்ளுதல். பிறகு இந்தத் தீராத பிரச்னைகளை மனதிற் கொண்டு திருக்குர்ஆனை ஆராய்தல் ஆகும்.

ஒருவர் பிரச்னைகளை இவ்வாறாக அலசி ஆராயும் முறையைக் கடைப்பிடிப்பதால், அவை பற்றிய குர்ஆனின் கண்ணோட்டத்தை தெளிவாகவும், எளிதாகவும் புரிந்துகொள்ள முடியும். தாம் இதற்கு முன் பல தடவை படித்திருந்த குர்ஆனின்

திருவசனங்களிலேயே இந்தப் பிரச்னைகளுக்கான பதில் மறைந்துகிடப்பதை அவர் காண்பார். மேலும், ''சிக்கலான பிரச்னைகளுக்கெல்லாம் எளிதான தீர்வு தரும் இத்தகைய கருத்துகள் இவற்றில் பொதிந்து கிடக்கின்றனவே! பன்முறை இவற்றைப் படித்திருந்தும்கூட இது வரை என் சிந்தனைக்கு அது எட்டவில்லையே!'' என்று அவர் வியப்படைவார். இதை என் அனுபவத்திலிருந்து கூறுகிறேன்.

## செயற்படுத்தாதவரை

ஆனால் திருக்குர்ஆனை உணர்ந்து கொள்வதற்குரிய வழிமுறைகள் அனைத்தையும் ஒருவர் மேற்கொண்டபோதிலும் குர்ஆன் என்ன பணிக்காக அருளப்பட்டதோ, அப்பணிக்கு ஆவனவற்றை நடைமுறையில் செய்துகாட்டும் முயற்சியில் அவர் ஈடுபடாதவரை அவருக்கு குர்ஆனுடைய உயிரோட்டத்துடனும், உள்ளக் கிடக்கையுடனும் நெருக்கமும், ஈடுபாடும் ஒருபோதும் ஏற்படாது. கோட்பாடுகளையும், கருத்தோட்டங்களையும் எடுத்துக்கூறும் ஒரு நூலல்ல இது. சாவகாசமாகப் படித்து அறிந்து கொள்ளக்கூடிய வேதமுமல்ல இது. பொதுவாக மதத்தைப்பற்றி இன்று உலகம் கொண்டுள்ள கருத்தின்படியுள்ள ஒரு மத நூலன்று இது ; சமயப்பள்ளியிலோ, துறவு மடத்திலோ இருந்து படித்து அதன் கருத்துகளையும், இரகசியங்களையும் புரிந்து கொள்ளக்கூடிய நூலுமன்று இது.

மாறாக முன்பக்கங்களில் சுட்டிக்காட்டியதுபோல் ஓர் இயக்கத்தை உருவாக்க வந்த வேதமாகும் இது. ஒரு புரட்சியைத் தோற்றுவிக்க வந்த நூலாகும் இது. இவ்வேத நூல் வந்ததுமே சாந்தகுணமும் இனிய இயல்பும் கொண்ட ஒருவரை, தனிமையிலிருந்து வெளிக்கொணர்ந்து இறைவனை விட்டு விலகிச் சென்று கொண்டிருந்த உலகுக்கு எதிராக நிறுத்திற்று. எல்லாவித அசத்தியத்திற்கும் எதிராகப் போர்க்குரல் எழுப்புமாறு அவரைத்

தூண்டிற்று. அன்று தீமைக்கும், வழிகேட்டுக்கும், இறைநிராகரிப்பு (குஃப்ரு)க்கும் தலைமை தாங்கியோருடன் அவரை மோதச் செய்தது. ஒவ்வொரு வீட்டிலிருந்தும் இனிய பண்பும், நல்லொழுக்கமும் உடைய ஒவ்வொருவரையும் ஈர்த்து, சத்தியத்தின்பால் அழைப்பு விடுத்துவந்த அவருடைய கொடியின் கீழ் ஒன்று சேர்த்து நிறுத்தியது.

ஒவ்வொரு திசையிலிருந்தும் விஷமிகளையும் - குழப்பம் விளைவிப்பவர்களையும் பொங்கி எழச்செய்து, அவர்களைச் சத்தியச்சீலர்களோடு மோதவிட்டது. ஒரு மனிதர் எழுப்பிய குரலோடு தன் திருப்பணியைத் தொடங்கி 'கிலாஃபத்தே இலாஹியா' - இறையாட்சி நிலைபெறும்வரை சத்தியத்துக்கும், அசத்தியத்துக்கும் இடையே ஏற்பட்ட கடுமையான போராட்டத்தில் இந்த மாபெரும் இயக்கத்துக்கு வழிகாட்டியாக இருந்தது. இந்த நீண்ட பயங்கரமான காலத்தின் ஒவ்வொரு கட்டத்திலும், ஒவ்வொரு நிலையிலும் அசத்தியத்தை எவ்வாறு தகர்த்தெறிவது, சத்தியத்தை எப்படி நிலைநாட்டுவது என்று எடுத்துரைத்தது. இறுதியாக இஸ்லாமிய வாழ்க்கை அமைப்பை நிலைநாட்டுவதில் அந்த இயக்கத்தை வெற்றி காணச்செய்து விட்டது!

எனவே இறைநெறிக்கும் இறைநிராகரிப்புக்கும்; இஸ்லாத்துக்கும் அஞ்ஞானத்துக்கும் இடையே நடக்கும் கடும் போராட்டத்தில் ஈடுபாடு கொள்ளாமலும், இப்போராட்டத்தின் எந்த ஒரு கட்டத்தினூடேயும் கடந்து செல்லாமலும் நீங்கள் இருந்தால், திருக்குர்ஆனின் சொற்களை மட்டும் திரும்பத் திரும்பப் படித்து விடுவதினாலேயே அதனுள் பொதிந்து கிடக்கும் பேருண்மைகளை எவ்வாறு புரிந்து கொள்ள முடியும்?

முழுமையாகப் புரிந்துகொள்ள வேண்டுமானால், அதனுடைய உயிரோட்டத்துடன் நெருக்கமும், ஈடுபாடும் கொள்ள வேண்டுமென்றால் யாவற்றுக்கும் முன்பாக இந்த மறையை எடுத்துக்கொண்டு இறைவனின் பால் உலகை அழைக்கும்

பணியைத் துவக்க வேண்டும். மேலும் அதன் வழிகாட்டுதலின்படி இந்தப் பாதையில் நடந்து செல்ல நீங்கள் முற்பட வேண்டும். அப்பொழுது திருக்குர்ஆன் அருளப்பட்ட காலத்தில் அதனை ஏற்றுக்கொண்டோருக்கு நேர்ந்த அனுபவங்கள் உங்கள் முன்னே காட்சிதரும்! மக்கா, தாயிஃப், அபிஸீனியா (ஹபஸ்) முதலிய கட்டங்களையும் நீங்கள் காண்பீர்கள் : பத்ரு, உஹது முதல் ஹுனைன், தபூக் வரையுள்ள கட்டங்களும் உங்கள் முன் காட்சிதரும்! அபூஜஹ்லும் அபூலஹபும் உங்கள் எதிரில் வருவார்கள்! நயவஞ்சகர்களும் யூதர்களும் உங்களைக் கடந்து செல்வார்கள்! ஈமான் - நம்பிக்கை கொண்டோரில் முதன்மையானவர்களான 'ஸாபிக்கூனல் அவ்வலூன்' எனும் திருக்கூட்டத்திலிருந்து , இஸ்லாத்தினைக் கனிவோடு நோக்கி அதனோடு பின்னர் இணைந்து கொண்ட மக்கள் வரை - ஒவ்வொரு வகையான மனிதர்களின் முன்மாதிரிகளையும் நீங்கள் காண்பீர்கள்.

இது ஓர் அற்புதமான அனுபவமாகும். இதனை நான் 'ஸுலூகே குர்ஆனி' - குர்ஆனிய அனுபவம் என்று குறிப்பிடுவதுண்டு. இதன் சிறப்பு என்னவென்றால், நீங்கள் எந்தெந்தக் கட்டத்தைக் கடந்து செல்கின்றீர்களோ அந்தந்தக் கட்டத்தில் குர் ஆனின் சில வசனங்களோ - அத்தியாயங்களோ தாமாகவே உங்கள் முன் நிற்கும். இந்தக் கட்டத்திற்காகவே, தான் அருளப்பட்டதாகவும், இன்ன இன்ன வழிகாட்டுதலையே தான் கொண்டுவந்திருப்பதாகவும் உங்களுக்கு அறிவுறுத்திக் கொண்டே போகும். அப்பொழுது குர்ஆனுடைய மொழியாற்றலும், இலக்கண நுட்பமும் ஒருக்கால் உங்கள் கண்ணுக்குப் புலப்படாமல் போகலாம். ஆனால் அதனுடைய இலக்கும், உயிரோட்டமும் உங்களுக்குப் புலப்படாமல் போகா!

அதுபோலவே, திருக்குர்ஆனின் கட்டளைகள், அதன் ஒழுக்க நெறிகள், பொருளாதார விதிமுறைகள், வாழ்வியல் பற்றிய

அறிவுரைகள், வாழ்க்கையின் பல்வேறு துறைகள் குறித்து அது அருளியுள்ள நெறிமுறைகள், வகுத்துள்ள சட்ட திட்டங்கள் ஆகியவற்றை நீங்கள் நடைமுறையில் மேற்கொள்ளாதவரை அவற்றை நீங்கள் சரியாகப் புரிந்து கொள்ள முடியாது. தன் தனிப்பட்ட வாழ்க்கைமுறையை இவ்வேதத்திற்குப் புறம்பாக அமைத்துக் கொண்டிருக்கும் தனி மனிதனும் இதனை அறிய மாட்டான்; சமூக வாழ்வின் அனைத்துத் துறைகளையும் இவ்வேதம் காட்டும் வழிமுறைக்கு முரணாக நடத்திச் செல்லும் சமுதாயமும் இதனைச் சரிவரப் புரிந்து கொள்ளாது.

**உலகளாவிய இயக்கத்துக்கு ஏற்ற உயர்மறை**

மனிதகுலம் அனைத்துக்கும் வழிகாட்டவே தான் அருளப் பட்டதாகக் குர்ஆன் வாதிடுகிறது என்பதை யாவரும் நன்கறிவர். குர்ஆன் ஆங்காங்கே''யாபனீ ஆதம்' என்று மனித குலம் அனைத்தையும் நோக்கி விளிக்கிறது. என்றாலும் அது அருளப் பட்ட காலத்தில் வாழ்ந்திருந்த அரபு மக்களை நோக்கியே அது பெரும்பாலும் பேசுகிறது. அது விவாதிக்கும் பல விஷயங்கள் அரபு மக்களின் இயல்பு, சுற்றுச் சார்புகள், வரலாறு, பழக்க வழக்கங்கள் ஆகியவற்றோடு தொடர்பு கொண்டவையாய் இருக்கின்றன எனும் உணர்வே அதனைப் படிப்பவருக்கு ஏற்படுகிறது. அதனைப்பார்த்ததும், 'மனிதகுலம் அனைத்துக்கும் வழிகாட்டியாக அருளப்பட்ட இவ்வேதத்தில் ஒரு குறிப்பிட்ட காலத்தையும் ஒரு குறிப்பிட்ட இடத்தையும் ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தையும் பற்றிய தன்மை மட்டும் இவ்வளவு அதிகமாகச் சர்ச்சை செய்யப்படுவானேன்!' என்று அவர் எண்ணத் தொடங்கு கிறார். இவ்விஷயத்தைப் பற்றிய உண்மையை நன்கு உணராதவர், 'இது அக்கால அரபு மக்களைச் சீர்திருத்துவதற் காகவே அருளப்பட்டிருக்கிறது. ஆனால் இன்று மனிதகுலம் முழுமைக்கும் - எக்காலத்துக்கும் பொருந்தக்கூடிய வழியினைக்

காட்டும் ஒரு வேத நூல் என்று வலிந்து வாதாடப்படுகிறது' எனும் ஐயப்பாடுகளுக்கு ஆளாகிவிடுகிறார்.

ஏதாவதொரு ஆட்சேபணையைக் கிளப்ப வேண்டுமென்ற நோக்கத்துடன் ஒருவர் இதைக் கூறவில்லை யென்றால், விஷயத்தைப் புரிந்து கொள்ளும் நோக்கத்துடன்தான் அவர் இந்த ஆட்சேபணையை எழுப்பியிருக்கிறார் என்றால், யாவற்றுக்கும் முன்பாக அவர் குர்ஆன் போதிக்கும் கோட்பாடுகள், கருத்தோட்டங்கள், ஒழுக்க விதிமுறைகள், செயல்முறைகளுக்கான நியதிகள் ஆகிய அனைத்தையும் ஆய்ந்து பார்த்து அவற்றில் ஏதாவதொன்று அரபு மக்களுக்கு மட்டும் அல்லது ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு மட்டும் அல்லது ஒரு குறிப்பிட்ட இடத்துக்கு மட்டும் உரியது எனக் கூறமுடியுமானால் அதனைக் கோடிட்டுக் காண்பிக்கட்டும். ஒரு குறிப்பிட்ட காலத்தைச் சார்ந்த மக்களை நோக்கி, இறைவனுடன் இணைவைக்கும் அவர்களுடைய பழக்க வழக்கங்கள் பற்றியும், அவர்களுடைய அஞ்ஞான மரபுகளைப் பற்றியும் கண்டித்து, அவர்களுடைய சூழ்நிலைகளிலிருந்தே ஆதாரங்களை எடுத்துத் தன்னுடைய ஏகத்துவக் கோட்பாட்டைக் குர்ஆன் நிரூபிக்கிறது - நிலை நாட்டுகிறது என்ற ஒரே காரணம், அதனுடைய அழைப்பும், அறிவுரையும் ஒரு குறிப்பிட்ட காலத்துக்கும், இடத்துக்கும்தான் உரியவை என்று தீர்மானிப்பதற்குப் போதுமானதாகாது.

இங்கு கவனிக்க வேண்டியது என்னவென்றால், இணைவைத்தல் (ஷிர்க்) பற்றிக் கண்டித்து திருக்குர்ஆன் என்ன கூறுகிறதோ அது அன்றைய அரபு முஷ்ரிக்கு (இணைவைப்பவர்)களின் ஷிர்க்கைப்போல இன்றைய உலகின் எல்லாவிதமான ஷிர்க் - இணைவைத்தல்களுக்கும் பொருத்தமானதாய் இருக்கிறதா இல்லையா, குர்ஆன் தரும் அதே ஆதாரங்கள் ஒவ்வொரு நாட்டிலும், ஒவ்வொரு காலத்திலுமுள்ள முஷ்ரிக்குகளின்

சிந்தனையைச் சீர்த்திருத்த - எண்ணங்களைச் சரிப்படுத்தப் பயன்படக்கூடியவையா இல்லையா, தவ்ஹீது (ஏகத்துவத்து)க் குத் திருக்குர்ஆன் தரும் சான்றுகள், ஏறத்தாழ அதே நிலையில், ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வோரிடத்திலும் தவ்ஹீதின் ஆதாரங் களாய் விளங்கக்கூடியவையா இல்லையா என்பதாகும்.

உண்மையில் அவை ஒவ்வொரு காலத்துக்கும் பொருத்த மானவையாய் இருக்கின்றன என்றுதான் எவரும் கூறுவர். அப்படி யாயின் ஒரு குறிப்பிட்ட காலத்தில், ஒரு குறிப்பிட்ட மக்கள் கூட்டத்துக்கு முதன் முதலில் போதிக்கப்பட்டது என்பதற்காக உலகளாவிய ஒரு நெறியை - அனைத்துலகுக்கும் பயன் தரும் தத்துவ இயலை ஒரு காலத்துக்கும், ஓர் இடத்துக்கும் மட்டுமே உரியது எனக் கூற எந்தக் காரணமும் இல்லை! உலகில் எந்தக் கொள்கையும், எந்த வாழ்வியலும், சமயச் சிந்தனை எதுவும், நடைமுறைச் சான்றுகள் இல்லாது - குறிப்பிட்ட ஒரு நிலையோடு தொடர்பு படுத்தப்படாது வெறும் வெற்றுரு (Abstract) தத்துவமாக போதிக்கப்பட்டதில்லை. அப்படி முழுக்க முழுக்க வெறும் தத்துவமாகவே எதனையும் போதிப்பது சாத்தியமில்லாததாகும் ; ஒருவேளை அது இயலுமென்றாலும் அவ்விதம் போதிக்கப்படும் தத்துவம் மனிதர்களின் வாழ்க்கையில் எவ்வித உணர்ச்சியையும் எழுப்பாது; நடைமுறை உருவமும் பெறாது. அது வரையப்படும் காகிதத்தோடேயே நின்றுவிடும்.

மேலும் சிந்தனை, ஒழுக்கம், பண்பாடு ஆகியவற்றில் உலகளாவிய ஒரு புரட்சியைத் தோற்றுவித்துப்பரவச் செய்வதற் காக, எடுத்த எடுப்பிலேயே அதனைச் சர்வதேச அழைப்பாக ஆக்குவது அவசியமில்லை. ஏன், நடைமுறைக்கு அது இசை வானதாயுமிராது; பயனுடையதாயுமிராது. உலகளாவிய ஒரு புரட்சி இயக்கத்தைப் பரப்புவதற்கு முறையான வழி எந்தக் கருத்தோட்டங்கள், விதிமுறைகள் ஆகியவற்றின் அடிப்படை

யில் மனிதனுடைய வாழ்க்கை அமைப்பை நிர்மாணிக்க அந்த இயக்கம் விரும்புகிறதோ அவற்றை யாவற்றுக்கும் முன்பாக, முதலில் இந்த அழைப்பு விடுக்கும் நாட்டில் முழு வலிமையுடனும், ஆற்றலுடனும் பிரச்சாரம் செய்ய வேண்டும். பிறகு இந்த அழைப்பை ஏற்று இயக்கத்தில் சேருபவர்களின் மொழி, இயல்பு, பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை மனதில் கொண்டு அந்த இயக்கத்தின் அடிப்படை விஷயங்களை அவர்களின் உள்ளங்களில் பதியவைக்க வேண்டும்.

பிறகு தம் நாட்டிலேயே இந்தக் கொள்கைகளை நடைமுறைக்குக் கொணர்ந்து, இதன்படி வெற்றிகரமான வாழ்க்கை முறையை நடத்திக் காண்பித்து உலகுக்கு ஒரு முன்மாதிரியாக அதனைச் சமர்ப்பிக்க வேண்டும். அப்பொழுது தான் பிறநாட்டினர் இதன் மீது கவனம் செலுத்துவார்கள். பிறநாட்டிலுள்ள நல்லறிவாளர்கள் இந்த வாழ்க்கை அமைப்பைப் பற்றிப் புரிந்து கொள்ளத் தாமாகவே முன்வருவார்கள். மேலும், தத்தமது நாட்டில் அதனை நிலைநாட்ட முயல்வார்கள். எனவே சிந்தனை - செயல் பற்றிய ஒரு கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்ட ஒரு வாழ்க்கை அமைப்பு ஆரம்பத்தில் ஒரு குறிப்பிட்ட நாட்டினரின் முன்னர்தான் சமர்ப்பிக்கப்பட்டது.

மேலும், அதன் உண்மையை வலியுறுத்திக்கூற அந்த நாட்டின் சூழ்நிலையிலிருந்தும், மரபுகளிலிருந்துமே ஆதாரம் தரப்பட்டது. மேலும், அந்தக் குறிப்பிட்ட நாட்டு மக்களுக்கு இந்தக் கோட்பாட்டின் உண்மையினை, இந்த வாழ்க்கை அமைப்பின் மாண்பினை உணர்த்துவதிலேயே சகல சக்திகளும் பயன்படுத்தப் பட்டன என்பதைச் சுட்டிக்காட்டி - அந்த வாழ்க்கை அமைப்பு, அந்தக் கோட்பாடு அந்த நாட்டுக்கு மட்டும்தான் உரியது என்று கூறுவது சரியாகாது.

ஒரு நாட்டினருக்கு மட்டுமே உரிய ஓர் அமைப்புக்கும், ஓர் உலகளாவிய அமைப்புக்கும் - இடையே பிரித்தறிவிக்கும்

தன்மைகள் எவையெனில், ஒரு நாட்டுக்கும் மட்டும் உரிய அமைப்பு அந்த நாட்டினருடைய மேம்பாட்டிலேயே அக்கறை கொள்கிறது; அல்லது அந்தக் குறிப்பிட்ட நாட்டினரின் உரிமை களைப் பாதுகாக்கவே இசைவாக இருக்கிறது; அல்லது பிற நாட்டினரை ஈர்க்க முடியாத சில கொள்கைகளையும், அடிப்படை களையும் தன்னுள் கொண்டிருக்கிறது. இதற்கு மாறாக, ஓர் உல களாவிய அமைப்பு மக்கள் அனைவருக்கும் சமமான அந்தஸ்தும் உரிமைகளும் வழங்க இசைவாக இருக்கிறது. மேலும் அதனு டைய கொள்கைகளிலும், விதிமுறைகளிலும் உலகமனைத்தை யும் தன்பால் கவர்ந்திழுக்கும் தன்மை இருக்கிறது.

இதுபோலவே ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மட்டும் பொருந்தக்கூடிய வாழ்க்கையமைப்பு சில கால மாறுதல்களுக்கும் கால ஓட்டங்களுக்கும் பிறகு பின்பற்றுவதற்குத் தகுதியற்றதாய் ஆகிவிடும் கொள்கைகளைத் தன் அடிப்படையாய்க் கொண்டி ருக்கிறது. இதற்கு மாறாக, ஒரு நிரந்தரமான வாழ்க்கையமைப் பின் கொள்கைகள் - மாறிவரும் சூழ்நிலைகள் அனைத்திற்கும் உகந்த தீர்வுகளை அளிக்கும் விதத்தில் எந்தக் காலத்திற்கும் பொருத்த முடையனவாகவே திகழ்கின்றன. இந்தக் கண்ணோட்டத்தில் பார்த்தால் குர்ஆன் அருளும் - கொள்கைகள், அது எடுத்துரைக்கும் வாழ்க்கை அமைப்பு ஆகியவை உண்மை யில் உலகளாவியனவாயும், எக்காலத்துக்கும் பொருத்தமுடை யனவாயும் இருக்கின்றன என்பது புலனாகும். இதில் ஐயங்கொள்ளச் சிறிதும் இடமில்லை.

## திருக்குர்ஆனும், திருத்தூதரும்

திருக்குர்ஆன் வாழ்க்கைத்துறைகள் அனைத்துக்கும் வழி காட்டும் விரிவான நீதி நூல் என்று பொதுவாகவே கூறப்படுகிறது. ஆனால் ஒருவர் இதைப் படிக்கும்போது சமூகவியல், ஒழுக்க

வியல், அரசியல், பொருளியல் போன்ற அனைத்து வாழ்க்கைத் துறைகள் பற்றிய விரிவான கட்டளைகளும் விதிமுறைகளும் அவருக்குத் தென்படுவதில்லை. திருக்குர்ஆன் திரும்பத் திரும்ப வலியுறுத்திக் கூறும் கட்டாயக் கடமை (பர்ளு) களான தொழுகை, ஜகாத் போன்றவை பற்றிக்கூட விரிவான விதிகளையும், விலக்குகளையும் அது தரவில்லை என்பதை அவர் காண்கிறார். அப்படியாயின் என்ன பொருளில் தான் இது ஒரு விரிவான வழிகாட்டியாக அமைந்திருக்கிறது என்பது பற்றி அவர் உள்ளத்தில் சந்தேகம் எழுகிறது.

திருமறையை மட்டும் இறைவன் வழங்கவில்லை, அத்தோடு இவ்வுலகுக்கு ஒரு தூதரையும் அவன் அனுப்பினான் எனும் அடிப்படை உண்மை வாசகரின் சிந்தனையிலிருந்து மறைந்திருப்பதால் அவர் மேற்சொன்ன குழப்பங்களுக்கு ஆளாகிறார். இங்கு ஒரு சான்றினைப் பார்ப்போம் ; ஒரு கட்டடத்தை நிர்மாணிப்பதற்கு நமக்கு ஒரு வரைபடம் (Plan) கொடுக்கப்பட்டு, அதன்படி நாமே அக்கட்டடத்தை கட்டிக் கொள்ள வேண்டும் என்றால் கட்டடத்திற்குரிய சின்னஞ்சிறு விஷயங்களும் அந்தப் 'பிளானில்' இடம் பெற்றிருக்க வேண்டும். ஆனால் பிளானுடனும் கட்டடத்தை நிர்மாணிப்பதற்குரிய குறிப்புகளுடனும் ஒரு பொறியாளர் அரசாங்கத்தின் தரப்பிலிருந்து அனுப்பப்பட்டு, அவர் அக்கட்டடத்தை நிர்மாணித்த பின்னர் அவரையும், அவர் நிர்மாணித்துள்ள கட்டடத்தையும் புறக்கணித்து விட்டு, அந்த வரைபடத்திலேயே கட்டடத்திற்குரிய ஒவ்வொரு சிறு தகவலையும் தேட முற்படுவதும், அதில் அந்த விவரங்கள் கிடைக்கவில்லையே என்று குறை கூறுவதும் அறிவுடைமையாகாது! திருக்குர்ஆன் சட்டவிதிகளின் பிரிவுகளையும் துணைச்சட்டங்களையும் (Rules & By Laws) விவரிக்கும் ஒரு நூலன்று; மாறாக அது மூலாதார அடிப்படை விதிகளுடன் கோட்பாடுகளையும் (Fundamental Principles & Doctrines) வழங்கும் ஒரு நூலாகும்.

இஸ்லாமிய வாழ்க்கை அமைப்பின் அடிப்படைகளை அறிவார்ந்த ரீதியில் தெளிவாக்கி, அதனுடைய ஒழுக்க அடிப்படைகளை எடுத்துரைத்து, அதற்காக இதயங்களைக் கவர்ந்திழுக்கும் வகையில் அறிவார்ந்த ஆதாரங்கள் அனைத்தையும் தந்து, அந்த அடிப்படைகளை நன்றாக உறுதிப்படுத்தி விடுவதே குர்ஆனின் தலையாய பணியாகும். எனவே அது மனிதனுக்கு வழிகாட்டுகிறது என்பதன் பொருள், இஸ்லாமிய வாழ்க்கை முறையைச் செயல்படுத்துவதற்காக வாழ்வின் ஒவ்வொரு சின்னஞ்சிறு அம்சம் குறித்தும் விரிவான சட்ட திட்டங்களையும் விதிமுறைகளையும் வகுத்துத் தருகிறது என்பதல்ல. மாறாக வாழ்க்கையின் ஒவ்வொரு துறை குறித்தும் அதற்குள்ள எல்லைகளையும் வரம்புகளையும் நிர்ணயித்து, இறைவனின் விருப்பத்துக்கு இசைவாக அத்துறைகளை எவ்வாறு அமைக்க வேண்டும், எவ்வாறு நிர்மாணிக்க வேண்டும் என்று அறிவிக்கக் கூடிய கைகாட்டிகளை ஆங்காங்கே அது ஊன்றி வைக்கிறது.

இந்த அறிவுரைகளுக்கும், வழிகாட்டுதலுக்கும் இசைவாக இஸ்லாமிய வாழ்க்கைமுறையைச் செயற்படுத்திக் காட்டும் பொறுப்பும் பணியும் இறைத்தூதரைச் சார்ந்திருந்தது. திருக்குர்ஆன் அருளிய நியதிகளுக்கு ஏற்ப உருவாகும் தனிமனிதனுடைய ஒழுக்கம் சார்ந்த வாழ்வு, சமூக அமைப்பு, நீதிமிக்க அரசு ஆகியவற்றின் நடைமுறை முன்மாதிரியாகத் (Practical Example) திகழவே நபி (ஸல்) அவர்கள் இறைவனின் தூதராக அனுப்பப்பட்டார்கள்.

## நலம்பயக்கும் கருத்து வேற்றுமை

குர்ஆனை ஆய்ந்து பார்ப்பவர்களுக்குப் பொதுவாகவே மற்றொரு சந்தேகமும் எழுவதுண்டு. அதாவது, இறை வேதம் வந்த பிறகும் வேற்றுமையிலும், பிரிவிலும் வீழ்ந்து தீனை பின்னப்படுத்துவோரை மிகக் கடுமையாகத் திருமறை கண்டிக்கிறது. ஆனால், திருக்குர்ஆனின் கட்டளைகளுக்கு விளக்கமும்

விரிவுரையும் தருவதில் பிற்காலத்தோரிடையே மட்டுமல்ல, இமாம்களிடையேயும், தாபியீன்களிடையேயும், ஏன் ஸஹாபாக்களான நாயகத் தோழர்களிடையேயும் கூட வேற்றுமை காணப்படுகிறது. கட்டளைகளைப் போதிக்கும் ஓர் ஆயத் (வசனம்) கூட முத்தஃபக் அலைஹி - இதுபற்றி அறிஞர்கள் ஒன்றுபட்ட விரிவுரை வழங்கியிருக்கிறார்கள் - என்று சொல்ல முடியாத அளவுக்கு வேற்றுமை காணப்படுகிறது. அப்படியானால், திருக்குர்ஆனுக்கு வேறுபட்ட விளக்கங்கள் கொடுப்போரெல்லாம் கண்டனத்துக்கு உரியோராவார்களா? இல்லையென்றால், திருக்குர்ஆன் எந்த விதமான வேற்றுமையை வெறுக்கிறது? எத்தகைய பிரிவினையைத் தடுக்கிறது?

இது மிகவும் விரிவாக விவாதிக்கப்பட வேண்டிய ஒரு பிரச்னையாகும். ஆனால் அத்தகைய விரிவான விவாதத்துக்கு இங்கு வாய்ப்பில்லை. தீனின் அடிப்படையில் ஒருங்கிணைந்து, இஸ்லாமிய இயக்க அமைப்பில் ஒன்றுபட்டிருந்து, அதனுடைய சட்டதிட்டங்களை மனத்தூய்மையுடனும் வாய்மையுடனும் ஆராய முற்படும்போது விரிவுரைகளிலும் விளக்கங்களிலும் ஏற்படும் நலம் பயக்கும் கருத்து வேற்றுமைகளை குர்ஆன் வெறுக்கவில்லை; தடை செய்யவில்லை. மன இச்சைகள், சுயநலன்கள் ஆகியவற்றின் காரணமாகத் தலைதூக்கி, குறுகிய நோக்குடன் ஆராய முற்பட்டு, இதனால் பல பிரிவுகளையும் தோன்றச் செய்து, அவற்றிடையே மோதல்களை விளைவிக்கக் கூடிய கருத்து வேற்றுமைகளைத்தான் குர்ஆன் கடுமையாக வெறுக்கிறது என்பதைச் சுருக்கமாகச் சுட்டிக் காண்பித்தால் போதுமானது.

மேற்சொன்ன இருவகை வேற்றுமைகளையும் அடிப்படையைக் கொண்டு கவனித்தாலும் ஒரே மாதிரியானவை யல்ல;

ஏற்படுத்தும் விளைவுகளைக் கொண்டு நோக்கினாலும் அவை ஒரே வகையானவை அல்ல! எனவே அவை இரண்டையும் ஒரே மாதிரியாக வகைப்படுத்திப் பேசுவது பொருத்தமற்றதாகும். முதலில் குறிப்பிடப்பட்டுள்ள நேர்மையான கருத்து வேற்றுமை முன்னேற்றத்திற்கே உயிர் போன்றது; வாழ்வியலுக்கு ஆத்மா போன்றது. அறிவும், சிந்திக்கும் திறனும் படைத்தோரைக் கொண்ட எந்த ஒரு சமூகத்திலும் அது இயற்கையாகவே காணப் படும். அவ்வாறு அது காணப்படுவதே சமூகம் உயிர்த் துடிப்புடன் இருக்கிறது என்பதற்கோர் அறிகுறியாகும். இத்தகைய கருத்து வேற்றுமையில்லாத சமூகம் சிந்திக்கும் மனிதர்களைக் கொண்ட தாக இல்லாமல் மரக்கட்டைகளைக் கொண்டதாகத்தான் இருக்க முடியும். இரண்டாவது வகையான கருத்து வேற்றுமை எந்தச் சமுதாயத்தில் தலை தூக்குகிறதோ அந்தச் சமுதாயத்தை அது அழிக்காமல் விடுவதில்லை என்பதை உலகறியும். அது தலைதூக்குவது சமூக ஆரோக்கியத்துக்கு அடையாளமல்ல; நலிவுக்கே அது அறிகுறியாகும்! விரும்பத்தக்க விளைவுகளை அச்சமூகத்தில் அது ஒருபோதும் தோற்றுவிக்காது. இந்த இருவிதமான கருத்து வேற்றுமைகளுக்கு இடையே உள்ள வித்தியாசத்தைக் கீழ்க்காணும் வகையில் விளக்கமாகத் தெரிந்து கொள்ளலாம்.

**ஒன்று :** நலம் பயக்கும் கருத்து வேற்றுமை தோன்றுமிடத்து இறைவனையும் அவனுடைய திருத்தூதரையும் ஏற்று பின்பற்றி ஒழுகுவதில் சமூகத்திலுள்ள அனைவரும் ஒருமனப்பட்டு ஒற்றுமையாக இருப்பார்கள். திருக்குர்ஆனும் நபிபெருமானார் (ஸல்) அவர்களின் வழிமுறையான சுன்னத்துமே எல்லாச் சட்டதிட்டங்களையும் இயற்றுவதற்குரிய மூலாதாரங்கள் என்று முழு மனதுடன் ஏற்றுக்கொள்ளப்படும். இந்நிலையில் மார்க்க

அறிஞர்கள் இருவரிடையே ஏதாவது மஸ்அலா - பிரச்னை பற்றி கருத்து வேற்றுமை ஏற்படலாம் ; அல்லது இரு காஜிகளிடையே - நீதிபதிகளிடையே ஏதேனும் ஒரு வழக்கு பற்றிய தீர்ப்பில் கருத்து வேற்றுமை தோன்றலாம். இவர்களில் எவரும் தங்கள் கருத்து மட்டும்தான் இஸ்லாத்தைச் சார்ந்தது என்று கூறவோ, மாறுபட்ட கருத்துக் கூறுபவர் 'தீனை' விட்டு விலகியவர் என்று கருதவோ கூடாது. மாறாக இருதரப்பாரும் தங்களுடைய ஆதாரங்களையும், சான்றுகளையும் முன் வைத்துத் தங்களால் இயன்ற வரை உண்மை எதுவென்று கண்டறியப் பணிபுரிய வேண்டும். முடிவைச் சமுதாயத்தின் பொதுக் கருத்துக்கோ, நீதிமன்றப் பிரச்னையாக இருந்தால் உயர்நீதி மன்றத்திடமோ விட்டு விட வேண்டும். இங்கு இரண்டில் எது உகந்ததோ அது ஏற்றுக் கொள்ளப்படும்; அல்லது இரண்டு கருத்துகளும் அனுமதிக்கத் தக்க - ஜாயிஸ்தாம் என்று உறுதிப்படுத்தப்படும்.

***இரண்டு :*** *தீனின் அடிப்படைகளிலேயே கருத்து வேற்றுமை கொள்ளுதல். சான்றாக எவரேனும் ஓர் ஆலிமோ, ஸூஃபியோ, முஃப்தியோ, சட்ட நிபுணரோ, தலைவரோ ஒரு பிரச்னையில் தீர்வு காணும்போது இறைவனும், அவனுடைய தூதரும் 'தீனின்' அடிப்படையெனக் கருதாத ஓர் அம்சத்தைத் தேர்ந்தெடுத்துத் கொண்டு பின்னர் அதனை வலிந்து 'தீனின்' அடிப்படையே அது தான் என்று கட்டாயப்படுத்துவதும், இன்னும் அந்தக் கருத்திலிருந்து மாற்றமான கருத்துக் கொண்டோரை 'தீனிலி'ருந்தும் சமூகத்திலிருந்தும் அப்பாற்பட்டவர் என்று கருதுவதும், பிறகு தம் கருத்தை ஏற்றுக்கொண்டோரை ஒரு கட்சியாக அமைத்து, இவர்கள்தாம் 'உம்மத்தே முஸ்லிமா' என்றும், மற்றவர்களெல்லாம் நரகத்துக்குச் செல்பவர்களே என்றும், எனவே ''முஸ்லிமாக இருந்தால் இந்தக் கூட்டத்தில் சேர்ந்துவிடு; இல்லையென்றால்*

முஸ்லிமே இல்லை!'' என்று கூறுவதும்தான் இரண்டாவது வகையான கருத்து வேற்றுமையாகும்.

இந்த இரண்டாவது வகையான கருத்து வேற்றுமையைத்தான் திருக்குர்ஆன் வன்மையாகக் கண்டிக்கிறது.

முதலாவது வகையான நலம் பயக்கும் கருத்து வேற்றுமைகள் எழுந்த நிகழ்வுகள் பல, நபிபெருமானார் (ஸல்) அவர்களின் முன்னிலையிலேயே நிகழ்ந்திருக்கின்றன. அத்தகைய கருத்து வேற்றுமைகளை நபிகள் பெருமானார் (ஸல்) அனுமதித்தார்கள் என்பது மட்டுமல்ல, அவற்றைப் போற்றியும் இருக்கிறார்கள். ஏனென்றால் சிந்தனை, ஆராய்ச்சி, உண்மையைக் கண்டுபிடிக்கும் ஆர்வம், ஆழ்ந்த நோக்கு, மார்க்க ஞானம் ஆகியவை சமுதாயத்தில் இடம் பெற்றிருப்பதற்கு இது ஓர் அறிகுறியாக இருந்தது. தீனிலும் அதன் சட்ட திட்டங்களிலும் அறிவார்ந்த மக்களுக்கு ஈடுபாடு இருக்கிறது என்பதாலும், இத்தகையோர் தங்கள் வாழ்க்கைப் பிரச்னைகளுக்குத் தீர்வு காணுவதில் தீனின் வரம்புகளைக் கடந்து செல்வதில்லை; மாறாக அதன் அடிப்படைகளுக்கு உட்பட்டுப்பிரச்னைகளுக்குத் தீர்வு காண விரும்புகிறார்கள் என்ற காரணத்தினாலும் இந்தச் செயல் போற்றுதற்குரியது எனக் கருதப்பட்டது. சமுதாயம் அடிப்படைக் கடமைகளில் ஒன்றுபட்டு, தனது தனித்தன்மையைப் பாதுகாப்பாக வைத்துக் கொள்ள வேண்டும். அதே சமயத்தில் சமுதாயத்தின் அறிஞர்களுக்கும், சிந்தனையாளர்களுக்கும் சரியான வரம்புகளுக்கு உட்பட்டு ஆராய்ச்சி செய்யும் சுதந்திரத்தை வழங்கி முன்னேற்றத்தின் வாயிலை என்றென்றும் திறந்து வைக்க வேண்டும் என்கிற பொன்னான நியதியை இந்தச் சமுதாயம் கடைப்பிடிக்கிறது என்பதைத்தான், நலம் பயக்கும் கருத்து வேற்றுமைக்கான இந்த அனுமதி சுட்டிக் காண்பிக்கிறது.

هٰذَا مَا عِنْدِیْ وَ الْعِلْمُ عِنْدَ اللهِ ،
عَلَيْهِ تَوَكَّلْتُ وَاِلَيْهِ اُنِيْبُ

''என்னிடம் உள்ளது இதுவே, முழுமையான ஞானம் அல்லாஹ் விடமே உள்ளது. அவனையே நான் முழுமையாக நம்பியுள்ளேன். மேலும் அவனையே நான் சார்ந்து நிற்கிறேன்.''

- அபுல் அஃலா